## 13. அடக்கமுடைமை

(குறள் 10, 1, 2, 4, 8, 3, 5, 7, 6, 9)

*121.* அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்.

*122.* காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு.

*123.* செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின்.

*124.* நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது.

*125.* எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

*126.* ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து.

*127.* யாகாவா ராயினு நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

*128.* ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி
னன்றாகா தாகி விடும்.

*129.* தீயினாற் சுட்ட புண்ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு.

*130.* கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து.

## XIV. THE WEALTH OF DEMEANOUR

(M.A. 10, 1, 5, 3, 6, 4, 7, 8, 9, 2)

131. As good conduct or demeanour makes excellence, it ought to be preserved more carefully than life.

132. Let one take pains and cherish and guard decorous demeanour. It is sole aid to him even though he learns it by making research and practising self-control.

133. Nobility is wealth of demeanour and lack of it will indicate base birth.

134. Though forgotten, the sacred text once conned may be re-learnt. The scholar will lose his worth and nobility if he lacks good demeanour.

135. As the envious man is benefit of opulence, so the man of no demeanour is devoid of greatness.

136. The strong-souled will bate not jot of good demeanour, knowing that any lack in it will entail the greatest disgrace.

137. Men of good demeanour will attain dignity as those who are lacking in it will be open to severe censure.

138. Good demeanour will be the seed of good, but evil demeanour will cause eternal distress.

139. It is not possible for men of good demeanour to utter evil words even by way of slip.

140. Senseless are they who, though learned in many things, have not learned to move in close harmony with the world.

---

131. Conventional behaviour is signified by decorum

134. Astronomers were held in reverence by the Tamils. Read 'Manda' for 'parpan'--(Parithi), birth as man.

140. The smart men of the times advocating reforms will do well to lay this to heart.

## 14. ஒழுக்கமுடைமை

(குறள் 10, 1, 5, 3, 6, 4, 7, 8, 9, 2)

131. ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும்.

132. பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை.

133. ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்.

134. மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

135. அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
யொழுக்க மிலான்க ணுயர்வு.

136. ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து.

137. ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி.

138. நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கம் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும்.

139. ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

140. உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்.

## XV. NOT LUSTING FOR ADULTERY

(M.A. 2, 3, 5, 4, 6, 7, 1, 8, 9, 10)

141. The folly of lusting for another's wife cannot be found in the world among those who are well-versed in sciences of virtue and wealth.

142. Among those that transgress virtue, among the sinners, none are more foolish than adulterous hunters after other man's wives.

143. Those that live doing evil to the indubitably virtuous are none other than the living dead.

144. They who seek a neighbour's wife without the least reflection about it, whatever their status be, gain nothing by it.

145. The adulterer who things it a trifling matter to trespass into another's home will entail undying, ever-lasting infamy.

146. Enmity, sin, fear and infamy - these four will never leave the lusty adulterer.

147. He who does not covet the chaste wife of another man will be a virtuous housefolder.

148. The great manliness of not seeing another's wife with a lusty eye is ont only a virtue to sages but exemplary conduct.

149. If it be asked who are entitled to all good things, they are those that touch not the chaste wife of another in this boisterous sea-girt world.

150. Though a man does evil, trespassing on the bounds of virtue, it is good not to lust after the womanliness of another's chaste sweetheart.

---

144. The millet seed stands for a trifle. The wife as the property of her husband is sacrosanct and inviolable.

## 15. பிறனில் விழையாமை

(குறள் 2, 3, 5, 4, 6, 7, 1, 8, 9, 10)

141. பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில்.

142. அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்.

143. விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்
றீமை புரிந்தொழுகு வார்.

144. எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்.

145. எளிதென வில்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

146. பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண்.

147. அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

148. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு.

149. நலக்குரியார் யாரெனி னாமநீர் வைப்பிற்
பிறற்குரியா டோடோயா தார்.

150. அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

## XVI. THE WEALTH OF PATIENT ENDURANCE

(M.A. 4, 1, 6, 3, 7, 8, 2, 5, 10, 9)

151. Like the earth that bears the delvers, to put up with one's scorners is best.

152. To forbear one's excess is always good, to forget them is even better.

153. The worst exigence is inhospitality to guests. The greatest might is forbearance of fools.

154. If it be desired that the highest respect should be kept up, cherish endurance and behave well.

155. The great will not in the least esteem the revengeful, but will treasure up their hearts the patient and persevering, like precious gold.

156. The revengeful can bave transient or ephemeral pleasure; the patient are praised for ever, as long as the world lasts.

157. Though others do us no good, it is good that we fell keenly for their ill-deed and do no vicious action in return.

158. Let us overcome by our righteousness those who have in their pride done us great injustice.

159. Those who bear up the painful words (abuses) of transgressers are purer and nobler than ascetics.

160. The great do penance by fasting, taking no food. They are only next in rant to those who endure the bitter words of other men.

---

To err is human, to forgive divine. Forgive and forget, 'the rarer action is in virtue than in vengeance' Shakespeare.

## 16. பொறையுடைமை

(குறள் 4, 1, 6, 3, 7, 8, 2, 5, 10, 9)

151. அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்த றலை.

152. பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று.

153. இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

154. நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும்.

155. ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.

156. ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.

157. திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று.

158. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல்.

159. துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா
யின்னாச்சொ னோற்கிற் பவர்.

160. உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு
மின்னாச்சொ னோற்பாரிற் பின்.

## XVII. NOT ENVYING

(M.A. 1, 2, 6, 3, 10, 7, 8, 9, 4, 5)

161. Accept as decorum one's nature of unenvying at heart.

162. If one can free himself from envying anybody in the world, it will be the best gift beyond compare.

163. He who desires neither virtue nor wealth is verily the man who does not covet the wealth of other men.

164. The wise do no unworthy acts through envy as they know that it will tempt men to do evil actions and bring on them disgrace.

165. Envy itself is enough for the ruin of the envious though forman fail to wreck it in ambush.

166. The family of him who envies gifts to others will certainly go to pot with neither food to eat nor clothing to wear.

167. The goddess of fortune will point to misfortune him who is envious by showing like envy to him.

168. Envy called a sinner, slays good fortune and hurls the soul down to the hell of fire.

169. The prosperity or success of the envious-hearted and the failure or adversity of the good-hearted will make men think and reflect.

170. There is none prosperous through envy, and none free from envy ever bereft of good fortune.

---

166. Embodied by kamban in his Ramayana.

168. My heart laments that virtue cannot live out of the teeth of emulation (envy). - Julius caesar

# 17. அழுக்காறாமை

(குறள் 1, 2, 6, 3, 10, 7, 8, 9, 4, 5)

161. ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு.

162. விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டு
மழுக்காற்றி னன்மை பெறின்.

163. அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான்.

164. அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து.

165. அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.

166. கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும்.

167. அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ
டவ்வையைக் காட்டி விடும்

168. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்.

169. அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்.

170. அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்.

## XVIII. NOT TO BE GREEDY

(M.A. 7, 5, 4, 3, 2, 6, 1, 9, 10, 8)

171. If the well-gotten wealth be coveted without justice, it will ruin the home and also lead to evil.

172. Those who feel ashamed of partiality will not do an unjust thing out of greed immense gain.

173. Those who desire other, heavenly or lasting joys will do nothing not virtuous out of excessive desire for earthly or transient pleasures.

174. Those who have overcome the senses and have had pure (not impure) vision will not be greedy out of exigence.

175. Of what avail will minute, extended (extensive) learning be it hateful things be done to all out of greed.

176. He who, out of greed for grace, stood firm in the righteous path will go to ruin if he hankers after Opulence and devises evil plans forgetting it.

177. Desire not success out of greed. When it matures, it seldom brings good.

178. If the cause for non-diminution wealth be sought, it will be found in not being greedy for others' well-begotten wealth.

179. The goddess of fortune will embrace the man who she knows full well has known the strength of virtue.

180. Thoughtless greed will bring on extinction. The pride of non-desire will bring about Victory.

---

Can wealth give happiness? - young. 'His best riches ignorance of wealth'. - Goldsmith Measure is medicine

## 18. வெஃகாமை

(குறள் 7, 5, 4, 3, 2, 6, 1, 9, 10, 8)

171. நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும்.

172. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்.

173. சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.

174. இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

175. அஃகி யகன்ற வறிவென்னாம் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

176. அருள்வெஃகி யாற்றின்க ணின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

177. வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

178. அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

179. அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு.

180. இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு.

## XIX. NON-ASPERSION

(M.A. 3, 5, 2, 1, 4, 9, 6, 7, 8, 10)

181. Though one speaks no words of virtue and does only ill-deeds, to say that he does not backbite is very pleasing.

182. To do evil, making default of virtues, is not worse than aspersing with a feigned smile.

183. Better than making a living by slandering is death which affords the wealth ensured by Virtue.

184. Though you speak unkind words in harsh tones in one's presence, don't utter in his absence words, the effect of which you do not anticipate.

185. It will be seen from base backbiting that one does not possess a virtuous heart though his tongue blabs virtue.

186. The world will tell the worst sins of him who slanders others behind their backs.

187. Those who know not well how to say pleasing words and be friendly, will sever friends by sowing discord.

188. What will they not do with strangers, who by nature will speak out the faults of their most intimate friends?

189. I believe the world will bear, out of charity, the load of him that casts aspersions behind the back, taking care to do so in the absence of the slandered.

190. If each person scans his own faults as he does his neighbour's, can any evil befall a liging man or undying soul?

---

182 'One may smile and smile and be a villian'.

190 Self-scrutiny habituates the avoidance of aspersion.

## 19. புறங்கூறாமை

(குறள் 3, 5, 2, 1, 4, 9, 6, 7, 8, 10)

181. அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது.

182. அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை.

183. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந் தரும்.

184. கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்.

185. அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்.

186. பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும்.

187. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட றேற்றா தவர்.

188. துன்னியார் குற்றமுந் தூற்று மரபினா
ரென்னைகொ லேதிலார் மாட்டு.

189. அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை.

190. ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு.

## XX. NOT TO TALK IDLY

(M.A. 6, 2, 3, 4, 5, 7, 10, 8, 9, 1)

191. All will despise the man who talks idly, kindling the wrath of many.

192. To talk idly (speak profitless words) in the presence of many is worse than doing ungracious acts to friends.

193. Profitless braggadochio proclaims an idle talker.

194. Senseless sordid talk to the throng will delight none and divorce them from good deeds.

195. If men of worth utter vain words, fame and greatness will depart form them.

196. Call him not son but chaff among men, one who indulges in or is fond of idle talk.

197. You may speak vain words if you please. But it is good that sages do not have silly or idle talk.

198. Wise men who wiegh thier words will not speak words that are not pregnant with wisdom.

199. Men of clear,· unbewildered vision will not speak vain words even in self-forgetfulness.

200. If you will speak, speak profitable words. In case you speak at all, never speak vain or idle words.

---

198 `Give everyman thine ear, but few they voice'

200 `Word are wisemen's counters, but they are the money of fools? (Hobbes)

Words are like leaves, and where they most abound much fruit of sense beneath is rarely found (Pope)

"Full of sound and fury, signifying nothing" (Shakespeare)

## 20. பயனில சொல்லாமை

(குறள் 6, 2, 3, 4, 5, 7, 10, 8, 9, 1)

*191.* *பல்லார் முனியப் பயனில சொல்லுவா*
*னெல்லாரு மெள்ளப் படும்.*

*192.* *பயனில பல்லார்முற் சொல்ல னயனில*
*நட்டார்கட் செய்தலிற் றீது.*

*193.* *நயனில னென்பது சொல்லும் பயனில*
*பாரித் துரைக்கு முரை.*

*194.* *நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாராப்*
*பண்பில்சொற் பல்லா ரகத்து.*

*195.* *சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில*
*நீர்மை யுடையார் சொலின்.*

*196.* *பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்*
*மக்கட் பதடி யெனல்.*

*197.* *நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்*
*பயனில சொல்லாமை நன்று.*

*198.* *அரும்பய னாயு மறிவினார் சொல்லார்*
*பெரும்பய னில்லாத சொல்.*

*199.* *பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த*
*மாசறு காட்சி யவர்.*

200. *சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க*
*சொல்லிற் பயனிலாச் சொல்.*

## XXI. DREAD OF EVIL DEEDS

(M.A. 8, 7, 10, 4, 5, 6, 2, 3, 1, 9)

201. The sinful will not dread, the great will dread the wanton pride of sinful action.

202. As evils grow evils, they are dreaded even more than fire.

203. They say that it is super-wisdom not to retaliate evil to those who make us suffer.

204. Don't do evil to any person even unconsciously. If you do it, the god of virtue will take revnege on the evil-doer.

205. Don't do evil on the score of poverty. If you do it for that reason, your evil deed will make you poorer still.

206. Don't do to others what may be called evil deeds if you wish that sins do not afflict you.

207. Those who have incurred any other enmity may escape, but the enmity of evil done will hotly pursue and undo the doers.

208. The ruin of evil-doers will closely pursue their sinful actions thier own shadow does their steps.

209. If you hold yourself dear, don't approach anything that may be called evil.

210. He will be a man devoid of ill-deeds if he does not do evil to others in an out of the way manner.

---

202. Yagas, sacred sacrifices of animals, may yield good, but evil deeds are like destructive fires.

## 21. தீவினையச்சம்

(குறள் 8, 7, 10, 4, 5, 6, 2, 3, 1, 9)

201. தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு.

202. தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்.

203. அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்.

204. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

205. இலனென்று தீயவை செய்யற்க செய்யி
னிலனாகு மற்றும் பெயர்த்து.

206. தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான்

207. எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும்.

208. தீயவை செய்தார் கெடுத லிழறன்னை
வீயா தடியுறைந் தற்று.

209. தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால்.

210. அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின்.

## XXII. KNOWLEDGE OF OBLIGATION

(M.A. 2, 1, 10, 9, 6, 7, 8, 3, 4, 5)

211. No recompense does duty demand. How does the world oblige rain?

212. All the wealth acquired by physical labour is for the sake of obliging the great.

213. No good better than obligation to others can be won in heaven (the world of gods) and here on earth.

214. He lives who knows what is acceptable to others' The rest will be ranked with the dead.

215. The wealth of the wise man who desires to do good to the world is as the full reservoir to the village as a whole.

216. If wealth goes to an obliging man, it will do good to all lke the fruit-bearing tree in the heart (middle) of the village.

217. If the liberal-minded man has an accession of wealth, hiw wealth will serve all humanity as the tree with its bark, leaf, flower, fruit etc. that fails not to cure with its healing balm.

218. Those who have by nature a due sense of duty will not fail to oblige even though they be in want.

219. If the benefactor becomes poor, his poverty is due to his paucity of beneficence.

220. If obligation will entail loss to any man, it is fit that he sells himself and fulfils his duty.

---

220 Compare `noblesse oblige'

## 22. ஒப்புரவறிதல்

(குறள் 2, 1, 10, 9, 6, 7, 8, 3, 4, 5)

211. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு.

212. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

213. புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற.

214. ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

215. ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு.

216. பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ
நயனுடை யான்கட் படின்.

217. மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்.

218. இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

219. நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயும்நீர
செய்யா தமைகலா வாறு.

220. ஒப்புரவி னால்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து.

## XXIII. GIVING

(M.A. 2, 1, 3, 4, 10, 9, 8, 6, 7, 5)

221. To give to the needy is real gift. The rest partakes of the nature of looking for return or equital.

222. To receive gift or to beg is bad, though the path pursued be good. To give is ever good, though there be no promise of heaven.

223. To give without pleading dire penury becomes a man of noble birth.

224. Till the suppliant's face is seen to be cheerful, mere commiseration without giving is no good.

225. To bear hunger is a devotee's merit. To appease that hunger is higher in merit.

226. To relieve the wasting hunger of the needy or destitute is for the earner of wealth the proper place to lay by.

227. The dire disease of hunger will scarcely touch him who habitually shares his meal with the hungry.

228. Hard- hearted men are they who hoard but to lose. Probably they know not the pleasure of cheerful giving.

229. It is certainly worse or more painful than begging if they who, to replenish the store, eat their own themselves, alone without giving to others.

230. Nothing is more painful than dying. Even dying is sweet for a man if he cannot afford at all to give.

---

222 Ordinarily beneficence aims at moksha.

224 Fine words butter no parsnips.

# 23. ஈகை

(குறள் 2, 1, 3, 4, 10, 9, 8, 6, 7, 5)

221. வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

222. நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று.

223. இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள.

224. இன்னா திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு.

225. ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலின் பின்.

226. அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

227. பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது.

228. ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

229. இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல்.

230. சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீத லியையாக் கடை.

## XXIV. PRAISE OR LAUDATION

(M.A. 2, 3, 4, 5, 10, 1, 6, 8, 9)

231. Giving is laudable living. Without it life has no real gain.

232. The words of all who speak are in praise of those that give to those that ask.

233. Nothing stands undying in the world but high fame incomparable.

234. If one attains wide renown, as wide as the earth, the heaven of the supernals will not extol wisemen.

235. Evil often accrues in the guise of good. undying fame rarely accrues to any but the wise.

236. If you appear at all in the world, do so with fame, They who make no fame had better disappear from than appear in it.

237. Why blame the despisers when you don't feel the blame of having made no fame?

238. If you don't bear the child of Fame, the whole world will reproach you (it will be a reporach to all the world).

239. The earth bearing the burden of the body that makes no fame will be baren of goodly luscious fruits.

240. Men who live without blame are those that really live and men who pass their days in infamy don't live at all.

---

233, 235 The Purest treasure mortal times afford.
Is spotless reputation; that, away,
Men are but glided -loam or painted clay:- (Shakespeare)
Good name, in man and woman, dear my lord, Is the immediate jewel of their souls (Ibid).
Fame, conceived by scholars, brings forth poverty, and brings on death.
Fame is the spur that the clear spirit doth raise.
(That last infirmity of noble mind)
To scorn delights and live laborious days - (Milton)

# 24. புகழ்

(குறள் 2, 3, 4, 5, 10, 1, 6, 8, 9)

231. ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
துதிய மில்லை யுயிர்க்கு

232. உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்
றீவார்மே னிற்கும் புகழ்.

233. ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில்.

234. நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு.

235. நத்தம்போற் கேடுமுள தாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.

236. தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

237. வசையிலா வண்பயன் குன்று மிசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

238. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன்.

239. வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு
மெச்சம் பெறாஅ விடின்.

240. வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

## XXV. THE WEALTH OF GRACE

(M.A. 2, 1, 3, 4, 5, 8, 6, 9, 7, 10)

241. The wealth of Grace is wealth of wealth. the wealth of gold even the vilest have.

242. Make the wealth of Grace by seeing it in righteous ways. It is your only mainstay, whatever other ways you devise for it.

243. To enter the world of darkness and pain is not for those who have grace at heart.

244. No deed, they say, to be dreaded by him who cherishes souls and wins grace.

245. Men of Grace suffer no pain here at any time. The vast plentiful world where winds blow bears witness.

246. Those who lose grace and do graceless deeds are, say they, men divested of true wealth and in oblivion of their suffering.

247. As this world is not for the poor, that world (heaven) is not for men devoid of grace.

248. Men of indigence may make riches at times. Men bereft of grace are undone once for all, seldom do they get better.

249. If the charity of an unbenevolent (graceless) man be carefully scrutinized, it will be found to be just like the unwise man having a vision of the great truth.

250. Think of yourself in the presence of the valiant when you, in angry mood, fall upon men weaker than yourself.

---

243 Hell is a world of darkness and agony.

245 Note the similitude of nature.

248 Note the metaphor of blooming in season.

# 25. அருளுடைமை

(குறள் 2, 1, 3, 4, 5, 8, 6, 9, 7, 10)

241. அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள.

242. நல்லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை.

243. அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
வின்னா வுலகம் புகல்.

244. மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை.

245. அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி.

246. பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரருணீங்கி
யல்லவை செய்தொழுகு வார்.

247. அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு.

248. பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றா
ரற்றாமற் றாத லரிது.

249. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரி
னருளாதான் செய்யு மறம்.

250. வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.

## XXVI. REJECTING MEAT

(M.A. ?, 2, 4, 6, 10, 5, 1, 7, 8, 9)

251. How can a man grace who eats the meat of other animals to fatten himself?

252. Those who are reckless cannot have enduring wealth. So meateaters cannot have the wealth of grace.

253. The mind of those who feed themselves on savoury meat can do no good as the implacable heart of men who are accustomed to wear arms.

254. Not to kill is grace. To kill is what is called lack of grace. To eat the meat of the killed animal is unworthy.

255. The temple of life subsists when no meat is taken. He who eats meat goes to hell, which will not disgorge him.

256. If the world will not buy meat for eating, none will sell meat for the sake of making money.

257. If those who eat meat feel that it is the ulcerous wound of other animals, they ought to desist from eating meat.

258. Those who are free from blame and have the clear vision will not eat the meat of animals which have lost their life or which are slaughtered.

259. One had better not slaughter an animal and eat its flesh than pour ghee and make a thousand sacrifices.

260. All living beings will lift both thier hands together and worship him who kills not and who rejects meat.

---

259 Condemns Sacrifices and ritualism.

260. Shows the refining influence of Buddhims. It is said that the poet has proscribed meat-eating for saints, sages and devotees.

# 26. புலால் மறுத்தல்

(குறள் 3, 2, 4, 6, 10, 5, 1, 7, 8, 9)

251. தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள்.

252. பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு.

253. படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற
னுடல்சுவை யுண்டார் மனம்.

254. அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்.

255. உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல் செய்யா தளறு.

256. தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.

257. உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின்.

258. செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன்.

259. அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று.

260. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும்.

## XXVII. PENANCE

(M.A. 4, 3, 2, 8, 10, 1, 6, 5, 7, 9)

261. To bear the pains of privations and to refrain from doing pain to life - these are the beauties of penance.

262. Penance becomes those who are real penitents. It is sheer waste of time and energy if others undertake it.

263. To provide the necessaires for the ascetics, other men seem to have forgotten to do penance.

264. Undoing foes and doing good to friends of virtue, penance can achieve, if these be willed by them.

265. Penance will be attempted here in this life as its performance will achieve exactly whatever is desired.

266. Those who do penance discharge thier legitimate round of duties. Others do vain things, caught in the mesh of desire.

267. The pain of those who do penance indefatigably will do them good, as gold in glowing fire becomes refined and shines forth.

268. All other lives or souls worship him who leads an unselfish or disinterested life.

269. Those who have won power by penance can quite succeed in overleaping or vanquishing death.

270. Why man are poverty - Stricken is obvious. For only a few do penance while many shirk privations.

---

The poet believes in the occult powers of those who fast and perform penitential actions.

264 Viswamitra and Thadaga illustrate it.

269 Alludes to the story of Markandeya.

## 27. தவம்

(குறள் 4, 3, 2, 8, 10, 1, 6, 5, 7, 9)

261. உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு.

262. தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது.

263. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொன்
மற்றை யவர்க டவம்.

264. ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு
மெண்ணிற் றவத்தான் வரும்.

265. வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்.

266. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு.

267. சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

268. தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்.

269. கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட் டவர்க்கு.

270. இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.

## XXVIII. IMMORAL CONDUCT

(M.A. 6, 5, 3, 4, 8, 7, 2, 1, 10 9)

271. The fraudulent conduct of men of deceitful mind will be laughed at by the five elements within themselves.

272. What can the sky-high, holy appearance do to a man whose conscience accuses him or who is conscious of his own guilt.

273. For a man who has no power of self-control, to put on a brave appearance is just like a cow wrapped in a tiger's skin grazing with impunity.

274. To do an immoral action under cover of penance or ascetic life is just like a fowler lurking in a bush and ensharing birds.

275. The fraudulent conduct of those who profess renunciation will bring forth many an evil, self-convicted of follies.

276. None are more cruel-eyed than those who have not renounced the world in their mind but who falsely profess to have renounced it and yet live well in it.

277. The world has men who shine bright outward as well as those who are dark or jet-black inward like the wild licorice or carat seed with a dark spot at the tip though bright red all over.

278. Many are the men who, though foul-hearted, appear holy, bathing in sacred waters, and pass for great men in the eye of the world.

279. Like the arrow which is dreadful in its effect and the crooked lute which is sweet to the ear, men are to be judged by their deeds.

280. One need not shave his head naked or grow his hair long if what the world condemns be shunned.

---

273 The havoc wrought by wicked men wearing the Sanyasi garb or ochredyed gown is condemned.

273-4 Illustrate the evil of those who profess to be holy.

279 The similes of the arrow and the lute illustrate the folly of judging men by their appearances.

280 Compare : A tree is known by its fruit.

# 28. கூடாவொழுக்கம்

(குறள் 6, 5, 3, 4, 8, 7, 2, 1, 10, 9)

271. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும்.

272. வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின்

273. வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.

274. தவமறைந் தல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

275. பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்
றேதம் பலவுந் தரும்.

276. நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

277. புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து.

278. மனத்தது மாசாக மாண்டார்நீ ரடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

279. கணைகொடிதி யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல்.

280. மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்.

## XXIX. AVOIDING FRAUD

(M.A. 1, 2, 4, 5, 7, 8, 9, 10, 6, 3)

281. He who has a strict guard over his mind against committing any fraud is the man who may be said to beware disdain.

282. To harbour in mind the idea of defrauding another's wealth is sin indeed.

283. The gain that comes by fraud will go to ruin in haste, though it might seem to grow apace and beyond bounds.

284. The lust for graudulent gain will cause undying pain in the end as its fruit.

285. They who watch for fatigue or forgetfulness on the part of those who own wealth with a view to defraud it will never become the subject of love in the hope of obtaining grace.

286. They who cannot act within prescribed bounds will be those who are extremely lusty for fraudulent gain.

287. To cherish the dark art of theft or fraud will not be found in those who have desired and gained the power of measuring everything in the world.

288. Like virtue which has its seat in the heart of those who have learnt moderation, deceit will reign in the heart of men of fraud.

289. They who are no experts in arts other than fraud will commit excesses and meet with instant death.

290. Deceitful men will lose their body (The seat of the soul), as surely as honest men will not fail to enter the world of the gods.

---

285 Opportunity makes the thief.

286 Moksha or Bliss it attained by true hermits who have absorbed the truths of the Saiva Siddhanta System. "Be true to thyself and thou shalt not be false to any man."

# 29. கள்ளாமை

(குறள் 1, 2, 4, 5, 7, 8, 9, 10, 6, 3)

281. எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு.

282. உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்.

283. களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்.

284. களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்.

285. அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்.

286. அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்
கன்றிய காத லவர்.

287. களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு
மாற்றல் புரிந்தார்க ணில்.

288. அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு.

289. அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர்.

290. கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு.

## XXX. TRUTH OR TRUE WORD

(M.A. 3, 4, 1, 5, 6, 7, 8, 9, 10, 2))

291. What is called Truth or True word may be defined to be speech without the least taint of evil.

292. Falsehood may take the place of the truthful word if it can produce blameless good.

293. Don't speak what your heart knows to be false. After uttering falsehood, your own conscience will scald you.

294. If a man acts without being untrue to his mind, he will be in the midst of all who live in the world (with success).

295. If a man speaks truth from the bottom of his heart, he will be a greater man those who do penance as well as dispense charity.

296. No praise like to uttering no falsehood, No utterance of falsehood will yield (be the mother of) all manner of virtues.

297. If one can keep one's self all his life from uttering any falsehood, it will be as good that he does no other charity.

298. External cleanliness can be had by the use of water. Internal purity can be found out from one's spoken word.

299. All lamps are no lamps to sages. Their only lamp is the lamp of non-utterance of falsehood.

300. Of all things found by us to be true, there is no virtue better than truth-speaking in any way.

---

300. Here again the author's personal experience, the use of 'we' Vide couplet 61. The mount is said to voice forth what is in the mind. The story of Harichandra illustrates strict adherence to truth under the severest trials.

# 30. வாய்மை

(குறள் 3, 4, 1, 5, 6, 7, 8, 9, 10, 2)

291. வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்.

292. பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.

293. தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
றன்னெஞ்சே தன்னைச் சுடும்.

294. உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன்.

295. மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை.

296. பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா வறமுந் தரும்.

297. பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

298. புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.

299. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

300. யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற.

## XXXI. NOT BEING ANGRY

(M.A. 2, 4, 1, 8, 5, 6, 7, 3, 9, 10)

301. He really checks his anger who does indulge in it where he can. Else what matters it if it be reined or given the reins.

302. Anger is bad where it cannot be indulged in. The evil is greater where it can be given full scope.

303. Whosoever he be, forget your wrath against him. It will else beget countless evils.

304. Wrath will kill smiles and delights. No other foe can there exist worse than wrath.

305. If one would have self-guard, let him guard against wrath. Else wrath will kill him.

306. Wrath, the Killer of assocaites, will burn the helpful float of dear kinsman.

307. He who cherishes wrath as a good thing, is like the hand of him who smites the ground and feels acute pain.

308. Though one does great injury like many flames of fire, it is well for him. if possible, to avoid anger.

309. If one does not think of wrath in one's mind, he gains all that his heart longs for.

310. Men of exceeding wrath are like men dead. Those who renounce all wrath are like stern ascetics.

---

Compare: `Anger is like A full-hot horse : who being allowed his way. Selfmettle tires him - (Shakespeare), Distinguish between anger, rage and wrath. Any difference between Vehuli (in 303, 8, 9) and sinam occurring in 301, 2, 4, 5, 6, 7, and 310?

# 31. வெகுளாமை

(குறள் 2, 4, 1, 8, 5, 6, 7, 3, 9, 10)

301. செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லிடத்துக்
காக்கினென் காவாக்கா லென்.

302. செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீய பிற.

303. மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும்.

304. நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற.

305. தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம்.

306. சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு
மேமப் புணையைச் சுடும்.

307. சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

308. இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

309. உள்ளிய வெல்லா முடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளி யெனின்.

310. இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

## XXXII. NOT DOING HARM

(M.A. 4, 2, 3, 10, 6, 1, 5, 7, 8, 9)

311. Though wealth be secured that yields glory, it is the tenet of the pure-hearted not to do harm to another.

312. It is the doctrine of the spotless great not to retaliate an injury done to them in wrath even in the case of one whose malice has worked its utmost.

313. While one has done no harm, if one retaliates the injury done to him without provocation, that tit for tat will bring woes beyond redemption.

314. To punish wrong doers is to do them great good and thereby make them feel ashamed of their action.

315. What gain will wisdom fetch if one will not pay heed to the sufferings of others as he does to his own.

316. What one has felt as great harm, that he must avoid doing to others.

317. It is a virtue not to do wilful harm to any in the least, at any time.

318. Why does a man who knows what is injurious to his own life do harm to any living soul?

319. If you do harm to others in the forenoon, harm will certaily afflict you of itself in the afternoon.

320. All woes redound to evil doers. Those who will refrain from doing harm are men who desire to be free from suffering.

---

314 `Love your enemies' Do good for evil.

319 Every cause will have its effect.

## 32. இன்னா செய்யாமை

(குறள் 4, 2, 3, 10, 6, 1, 5, 7, 8, 9)

311. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

312. கறுத்தின்னா செய்தவக் கண்ணு மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

313. செய்யாமற் செற்றார்க்கு மின்னாத செய்தபி
னுய்யா விழுமந் தரும்.

314. இன்னாசெய் தாரை யொருத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

315. அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை.

316. இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல்.

317. எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானா
மாணாசெய் யாமை தலை.

318. தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்.

319. பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.

320. நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.

## XXXIII. NOT KILLING

(M.A. 4, 6, 3, 2, 5, 7, 1, 10, 9, 8)

321. If you ask what a virtuous deed is, it is non-killing. To kill leads to every ill-deed.

322. To share your meal with others and protect many a life - is the head and crown of all charities, as propounded by sages in their writings.

323. Not to kill is the first and incomparable virtue. The next in rank to it is not to speak an untrue word.

324. If it be asked what is regarded as good path, it is the path pursued by him who kills no living being.

325. Of all who renounce in dread of instability, the foremost is he who dreads killing and does not slay.

326. Even Yama (God of Death) who devours life will not fall upon but spare him who holds fast to and practises the doctrine of non-killing.

327. At the risk of your own life, don't do the act of separating the sweet life of any other being.

328. Though the gain of good be esteemed, it will not become the sages to gain anything by. slaughtering.

329. The base mortals who pursue the calling of salughtering will be looked upon as doers of foul deeds by those who know its vileness.

330. The great will call men with loathsome body and leading poor and base lives now, as men who had in the past separated life from some body.

---

Chapter 28 - 33 speak of negative virtues except chapter 30 which treats of the positive virtue of truth-speaking.

322 The author's study of ancient writings is reflected here.

# 33. கொல்லாமை

(குறள் 4, 6, 3, 2, 5, 7, 1, 10, 9, 8)

321. அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.

322. பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

323. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

324. நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி.

325. நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சி
கொல்லாமை சூழ்வான் றலை.

326. கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று.

327. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

328. நன்றாக மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்கு
கொன்றாகு மாக்கங் கடை.

329. கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து.

330. உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

## XXXIV. INSTABILITY

(M.A. 1, 3, 2, 4, 5, 6, 7, 8, 9, 10)

331. The ignorance of those who mistake the transient for the permanent or stable is of the worst type.

332. Large wealth is as the crowd in the dancing hall, and its loss is as the dispersing crowd when the dances are over.

333. All wealth is of a transient nature. Masters of wealth must then and there do works that will last long.

334. Everyday, though it be but one and single, is a sword that cuts away life little by little. It is well to know this truth.

335. Before the tongue dies and hiccough follows, good deeds must be resorted to and executed in time.

336. This world is proud of the fact that the man of yesterday is no more to-day.

337. Those who do not know for certain if they will live the whole day through, have not only a crore of thoughts but many a crore.

338. The kindship between the body and the soul is akin to the shorlived relationship between the egg and the hatched bird which quits it for good or between the bird and the nest which it deserts once for all.

339. Death is like being asleep, and birth is like waking again from it.

340. The soul abiding in a retreat within the body has probably no settled home in it.

---

body, youth and wealth are unstable and perishable

336 Note the humour and the irony,

339 Our birth is but a sleep and a forgetting. (Wordsworth)
We are rounded with a sleep. (Shakespeare)
There is no death. What seems so is transition. (Longfellow)

340 The soul was believed to have had its seat in the pineal gland.

# 34. நிலையாமை

(குறள் 1, 3, 2, 4, 5, 6, 7, 8, 9, 10)

331. நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

332. கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.

333. அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல்.

334. நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

335. நாச்செற்று விக்குள்மேல் வாரா மு னல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

336. நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

337. ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.

338. குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்போ டுயிரிடை நட்பு.

339. உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

340. புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு.

## XXXV. RELINQUISHMENT

(M.A. 5, 7, 1, 2, 3, 9, 4, 8, 6, 10)

341. Whatever thing of whatever kind a man relinquishes, he has no more suffering from it at all.

342. Relinquish while there is time still to aspire. After relinquishment many are the higher pleasures for the relinquisher here.

343. Subdued must be the senses five, and relinquished must be desires all together.

344. Natural for penance is utter destitution. Wealth revives delusion afresh.

345. Why go in quest still? The body is a load to those bent on cutting off births.

346. He who serves the pride of I and mine will enter a world beyond that of the gods.

347. Those who do not detach themselves after forming an attachment will have a host of sufferings firmly clinging to them.

348. Those who make absolute relinquishment take the chiefest place. The rest bewilder, entangled in the net.

349. Only the extinguishment of attachment will bring about the extinction of birth. All else will be found to be transient.

350. Cling to him who has no attachment and to that which He bids you cling. Attach yourself to Him for your detachment from the world.

---

All religions and philosophies exhort mankind to extinguish desire and to lead a life of meditation and prayer in solidtude in old age. Anthanars are not Parpars. Vide Tolkappiam Sutras 1137-8.

## 35. துறவு

(குறள் 5, 7, 1, 2, 3, 9, 4, 8, 6, 10)

341. யாதனின் யாதனி னீங்கியா னோத
லதனி னதனி னிலன்.

342. வேண்டி னுண் டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல.

343. அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு.

344. இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து.

345. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை.

346. யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

347. பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு

348. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

349. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும்.

350. பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

## XXXVI. TO KNOW TRUTH

(M.A. 2, 7, 6, 1, 3, 8, 5, 4, 9, 10)

351. To take the unreal for the real argues delusive and degraded birth.

352. Hell (darkness, birth) departs and heaven (moksha, liberation, happiness) comes to men who have the pure vision free from delusion.

353. To men from whom doubt (scepticism) departs and clearness ensues heaven is higher than earth.

354. To men who have no perception of truth, the fivefold senseperception is of no avil.

355. Whatever thing of whatever kind it be, It is wisdom to perceive the real truth (behind the veil).

356. Men who learn and come at truth here will attain liberation from birth in this world (the path which does not lead them here again).

357. The mind that ponders and knows the Reality need not think of birth again.

358. In order to get rid of the folly which engenders birth, it is wisdom to come at the dignity of the great Reality.

359. If you know the Truth and can act in a way to reject support or attachment, the disease of birth-sorrow which clings to the body will not affect you.

360. Lust, wrath, delusion - when even the names of these three are extinguished, birth-sorrow will be extinct.

---

Read this Chapter with Chapter I. Know thyself and thou will know god.

355. An often quoted maxim.

## 36. மெய்யுணர்தல்

(குறள் 2, 7, 6, 1, 3, 8, 5, 4, 9, 10)

351. பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானா மாணாப் பிறப்பு.

352. இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

353. ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து.

354. ஐயுணர் வெய்திக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

355. எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

356. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

357. ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

358. பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு.

359. சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

360. காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடும் நோய்.

## XXXVII. TO ERADICATE INTENSE DESIRE

(M.A. 3, 9, 7, 5, 4, 1, 6, 2, 8, 10)

361. Intense desire, they say, is for all living beings and at all times the unfailing birth - begetting seed.

362. If any thing you desire, desire cessation from birth. That cessation will come when it is desired.

363. There is no great wealth here life non-desire. Nothing is there like it.

364. Purity is non-avidity. That too will come when truth is sought.

365. Men freed from intense desire will be free from births. Other men are not quite free from regeneration.

366. Intense desire it is, which brings on delusion. Therefore, to guard against is assault is ascetic Virtue.

367. If one quite extirpates his intense desire, good or worthy deed will unflinchingly ensue accordingly as it is desired.

368. No affliction will befall men devoid of intense desire. Where it is found, woes cluster without fail.

369. If intense desire, the affliction of afflictions, be eradicated, pleasures will surge unceasingly.

370. If intense desire, which is insatiable, be rooted out, it (the desire extinction) will afford the state of eternal bliss.

---

The extinction of desire causes extinction of birth.

363. gives the decided opinion of the author of the subject.

# 37. அவாவறுத்தல்

(குறள் 3, 9, 7, 5, 4, 1, 6, 2, 8, 10)

361. அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

362. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

363. வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில்.

364. தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.

365. அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையா
ரற்றாக வற்ற திலர்.

366. அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா.

367. அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்.

368. அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேற்
றவாஅது மேன்மேல் வரும்.

369. இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

370. ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்.

## XXXVIII. FATE, DESTINY, FRUIT OF ACTION

(M.A. 1, 2, 3, 8, 5, 6, 7, 9, 10, 4)

371. Activity due to good fate will produce prosperity. Sloth, due to ill-fate, will produce - Adversity or loss of wealth.

372. Losing or ill-fate will make wisdom foolish and gaining or good fate will extend wisdom.

373. Though versed in many a sastra embodying subtle wisdom, the wisdom endowed by Fate of natural instinct will gain the upper hand.

374. Two fold is the nature of the world : Men of fortune different from men of clear or brilliant wisdom.

375. To make wealth, fate will turn all good things into evil and *vice versa* (all evil things into good).

376. Unless fate ordains it, wealth cannot be acquired, however vigilant will be, in our expenses.

377. Save (except) as Fate, Destiny or God ordains it, allots to each his due, even millionaires (men owning crores or tens of millions) cannot enjoy their wealth.

378. If Fate will not give or spare men their dues (Sorrows and tribulations), those destitute of enojyment will certainly turn ascetics.

379. Why do men who enjoy happiness in times of fortune bewail their sad lot or evil in adverse circumstances?

380. What is there more potent than Destiny? However we plan to avert it, it will ever precede or forestall.

---

Fate is fruit of action.

373 The power of instinct or hereditary talent.

374, 377 Familiar Quotations, Is `ool' from `oolthal' , malarthal, blooming by nature, instinct or fruit of action?

# 38. ஊழ்

(குறள் 1, 2, 3, 8, 5, 6, 7, 9, 10, 4)

371. ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி.

372. பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை.

373. நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
னுண்மை யறிவே மிகும்.

374. இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு.

375. நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.

376. பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம.

377. வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

378. துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால
வூட்டா கழியு மெனின்.

379. நன்றாங்கா னல்லவாக் காண்பவ ரன்றாங்கா
லல்லற் படுவ தெவன்.

380. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

## XXXIX. REGAL DIGNITY

(M.A. 1, 2, 3, 4, 6, 5, 8, 9, 10, 7)

381. He is a lion among monarchs who own these six things: army, people, wealth, counsel, friends, forts.

382. Fearlessness, giving, knowledge and energy, not to be wanting in any of these four qualities becomes a monarch.

383. Vigilance, learning and resolutness - these three (virtues) leave not the rulers of the land.

384. A king is he who fails not in virtue, eschews vice, lacks not courage and keeps up humour.

385. He is a monarch who is able to devise ways and means to make hoards and protect them and who knows how and when and what for to spend them.

386. When a king has easy access and speaks no harsh word, his kingdom praises him.

387. The world is at the beck and call of him who speaks kindly, gives gracefully, and rules firmly.

388. The king who administers strict justice and protects his subjects is esteemed by them as thier god.

389. The world rests secure under the umbrella (protection) of the worthy king who brooks bitter counsel.

390. He is a light among kings who has these four excellences: munificence, gracefulness, justice and care of common weal.

---

This chapter deals with the personal, physical, mental and moral qualifications and functions of kings and with what go to constitute lions, lights, (luminaries among them).

# 39. இறைமாட்சி

(குறள் 1, 2, 3, 4, 6, 5, 8, 9, 10, 7)

381. படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு.

382. அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு.

383. தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவற்கு.

384. அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு.

385. இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

386. காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறு மன்ன னிலம்.

387. இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலாற்
றான்கண் டனைத்திவ் வுலகு.

388. முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

389. செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

390. கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு
முடையானாம் வேந்தர்க் கொளி.

## XL. LEANING (LITERACY)

(M.A. 1, 2, 3, 8, 10, 4, 7, 5, 9, 6)

391 Learn whatever you learn thoroughly, without doubt or defect and then act in consonance with it.

392. The wise say that numbers and letters are the eyes of all human beings.

393. The eyed are called the learned, and the unlearned are said to have sores in their faces.

394 What scholars do is like this: they enjoy society when they meet and when they leave, they make each other think of their sweet conference in their absence.

395 Like the poor lowly bowing before the rich, the scholar stands obediently before his Guru. The scholar is honoured and takes the first place whereas the illiterate man holds the lowset rank.

396 The more the sandy spring is dug up, more water wells up in it. The more men learn, more of knowledge do they gain.

397. To the learned man every land is his own, and every place his home. Why the does a man pass his days and die without learning?

398. The learning acquired by a man in his life blesses him, not only here but in the seven births to come.

399. When the learned man sees that what delights himself delights the world, he finds only pleasure in it.

400. Learning is an excellent and imperishable wealth to a man while all the rest is nothing but trash to him.

---

391. Be thorough. 392. Arithmetic and literature equally essential. 395. Lowliness is young ambition's ladder.

397. The learned man is a cosmopolitan.

399. he is never envious. 400. Learning is real wealth.

# 40. கல்வி

(குறள் 1, 2, 3, 8, 10, 4, 7, 5, 9, 6)

391. கற்க கசடற கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக.

392. எண்ணென்ப வேனை யெழுத்தென்ப யிவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.

393. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

394. உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில்.

395. உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்.

396. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.

397. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

398. ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.

399. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

400. கேடில் விழுச்செல்வம் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை.

## XLI. NO LEARNING (ILLITERACY)

(M.A. 1, 2, 3, 4, 5, 8, 7, 9, 6, 10)

401. To get into the society of the learned without fulness of knowledge is like a novice playing dice without the checquered board, without the compartments marked out.

402. For the illiterate man to desire to speak in a learned assembly is like to the two papless or flat chested woman desiring to be admired for her charms.

403. Even the illiterate will pass for very good men if they will hold their peace in the society of the learned.

404. The wise do not accept what the illiterate speak though words of great wisdom flow from their lips.

405. Though the illiterate man assumes worth and presumes to talk, his words will fall flat on the learned audience.

406. The illiterate but exist, and they are barren like saline or brackish soil.

407. The beauty of the man who lacks the power of appreciating wisdom or understanding niceties of thought is like that of the well-decked puppet of clay.

408. The fortune of the illiterate is more harmful than the adversity of the wise and good.

409. Though the illiterate are nobler born, they will not be held equal to the literate who are low born.

410. The highly educated and the illiterates are like to men and beasts respectively.

---

401. Hopscotch or Pandi game. 403. Silence is golden, speech is silver. 404. The tyranny of habit or prejudice. 406. God has made them: let them pass for men. 408 Fortune favours fools. 409. Unlearned men are like gilded loam or painted clay. 410. The literate bipeds are like quardrupeds

# 41. கல்லாமை

(குறள் 1, 2, 3, 4, 5, 8, 7, 6, 9, 10)

401. அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

402. கல்லாதான் சொற்கா முறுதன் முலையிரண்டு
மில்லாதாள் பெண்காமுற் றற்று.

403. கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின்.

404. கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்.

405. கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

406. உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர்.

407. நுண்மா ணுழைபுல மில்லா னெழினல
மண்மாண் புனைபாவை யற்று.

408. நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு.

409. மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு.

410. விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.

## XLII. LISTENING

(M.A. 8, 2, 9, 1, 4, 3, 6, 10, 5, 7)

411. The wealth of wealths is the wealth of the ear. That wealth is the most important or paramount of all welath.

412. When there is no mental food for the ear, a little food of viand will be spared for the stomach (to keep up life).

413. They who listen and feed thier ear sumptuously will bear comparision with the gods who are served with rich-oblations.

414. Though a man has not learned anything, let him give his ear to the wise words of the lettered.

415. The oral words of the righteous will stand in good stead like the staff or walking stick to those treading on slippery ground.

416. Hear anything good, however little, and that will, to that extent, lend great dignity.

417. Those who are clear-headed and have accumulated treasures through their ear will never speak a foolish word, even inadvertently.

418. The ear not pierced by the wise words of others though outwardly attentive to them is really unlistening or inattentive still.

419. Those who have not listened to sagely counsels will seldom speak polite language.

420. It matters little to the world if the beastly men, who eat but seldom listen, cease to exist, die or live.

---

412. When attention is rapt to an interesting discourse, the bodily craving is unthought of and ignored. Food is taken in the recess lest hunger distracts attention.

418. Bestial men are gormandizers.

# 42. கேள்வி

(குறள் 8, 2, 9, 1, 4, 3, 6, 10, 5, 7)

411. செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை.

412. செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்.

413. செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி
னான்றாரோ டொப்பர் நிலத்து.

414. கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை.

415. இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார்வாய்ச் சொல்.

416. எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்.

417. பிழைத்துணர்த்தும் பேதைமை சொல்லா ரிழைத்துணர்ந்
தீண்டிய கேள்வி யவர்.

418. கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி.

419. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது.

420. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க
ளவியினும் வாழினு மென்.

## XLIII. THE WEALTH OF WISDOM

(M.A. 10, 6, 5, 3, 4, 2, 8, 7, 9)

421. Wisdom is a weapon that averts ruin. It is an inner fort which stands four-square against implacable foes.

422. Wisdom curbs the roving mind and wards off evil and shows the way to achieve good.

423. Wisdom finds truth in all utternance, whoever might make it.

424. Wisdom speaks clearly and intelligibly to all and gleans occult truths from other's utterances.

425. What is embraced by the world is wisdom. Wisdom is ever the same, neither blossoming nor fading.

426. Wisdom lies in dwelling in harmony with the world, however it might fare.

427. The wise know what is to come or what is feasible or good. Fools are those who have not learned to recognise it.

428. It is unwisdom not to fear what is to be feared. It is the role of the wise to fear what is to be feared.

429. The wise who foresee evils and keep watch and ward over them will be quite free from their onslaught.

430. The wise have all, and the foolish are poor, whatever they might have.

---

423. A familiar quotation

428. Fools rush in where angels fear to tread.

429. Prevention is better than cure. The world includes the learned and the unlearned or means the learned only according to the context.

# 43. அறிவுடைமை

(குறள் 10, 6, 5, 3, 4, 2, 8, 7, 9)

421. அறிவற்றங் காக்கும் கருவி செறுவார்க்கு
முள்ளழிக்க லாகா வரண்.

422. சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு.

423. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு

424. எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு.

425. உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு.

426. எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு.

427. அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா
ரஃதறி கல்லா தவர்.

428. அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்.

429. எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
யதிர வருவதோர் நோய்.

430 அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்.

## XLIV. TO CORRECT FAULTS

(M.A. 2, 3, 10, 1, 8, 9, 4, 5, 6, 7)

431. The prosperity of those who are neither haughty nor wrathful nor vulgar is of the nature of opulence.

432. Miserliness (hard-fistedness), over-estimation and unseemly mirth are faults in the king.

433. Those who fear disgrace will deem their faults which are as small as millet-seed as great as palmyra.

434. Guard against faults as carefully as you would your substance, for these are foes that will hurl you into ruin.

435. The jocund life of a man who does not guard himself against the coming evil will soon pass away as the rick or stack of straw consumed by the fire.

436. What fault can be imputed to a king who at first cares for his own and then scans the faults of others?

437 The wealth of the niggard who does not do what ought to be done will of itself go to wrack and ruin.

438. Covetous heart, called avarice or greed, is not to be classed with any other fault but stands apart as the worst of all.

439. Never extol yourself. Don't desire to do any deed that brings no good.

440. If you can gratify your desires without publicity, your foes' arts and artifices will then be of no avail.

---

432, 7, 8 condemn parsimony as the worst of vices.

436. Physician, heal thyself.

439. Self-glorification is a great sin.

## 44. குற்றங்கடிதல்

(குறள் 2, 3, 10, 1, 8, 9, 4, 5, 6, 7)

431. செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

432. இவறலு மாண்பிறந்த மானமு மாணா
வுவகையு மேத மிறைக்கு.

433. தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்.

434. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
யற்றந் தருஉம் பகை.

435. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

436. தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி
னென்குற்ற மாகு மிறைக்கு.

437. செயற்பால செய்யா திவறியான் செல்வ
முயற்பால தன்றிக் கெடும்.

438. பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளு
மெண்ணப் படுவதொன் றன்று.

439. வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

440. காதல காத லறியாமை யுய்க்கிற்பி
னேதில வேதிலார் நூல்.

## XLV. TO GET THE AID OF THE GREAT

(M.A. 3, 2, 1, 5, 4, 6, 7, 10, 9, 8)

441. Acquire the friendship of the virtuous and the supremely wise after mature consideration and careful choice.

442. Cherish and secure the friendship of the great who can devise measures to remove the existing evils and to prevent the coming ones by anticipation.

443. To cherish the great and make them one's own is the rarest of all rare virtues.

444. To conduct yourself in a manner so that those who are greater than yourself are your kinsmen is the head and crown of all power.

445. As the king acts on the advice of his ministers who are, as it were, his eyes, he had better have his counsellers by his side as his kinsmen.

446. He who is able to move with the great as his kindred will have none to dread as his foes.

447. Who can bring about the ruin of those who command counsellors who will boldly and fearlessly reprove their errors?

448. The king without the safeguard of counsellors who will censure him when he does wrong, will bring about his own ruin or will need none to do it.

449. The man who has no capital can have no gain. So he who has no support of friends can have no stability.

450. To forego the friendship of the good is ten times worse than the hate of many foes.

---

Great men are virtuous, wise, men of forethought who have courage of their conviction and act regardless of frown or favour.

## 45. பெரியாரைத் துணைக்கோடல்

(குறள் 3, 2, 1, 5, 4, 6, 7, 10, 9, 8)

441. அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்.

442. உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

443. அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

444. தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

445. சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

446. தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்.

447. இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

448. இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

449. முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை.

450. பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

## XLVI. AVOIDING THE VULGAR

(M.A. 1, 4, 3, 5, 6, 7, 10, 9, 8, 2)

451. Worthies will dread the vulgar. The vulgar will have the vulgar by his side as kinsmen.

452. Waters will differ in quality according to the nature of the soil. So men's wisdom differs in accordance with the company they keep.

453. Men's feelings or thoughts are due to their mind. The man's status is judged by his company.

454. Man's wisdom seems to issue from his mind, but it is really the fruit of his association.

455. Both purity of mind and purity of action issue from and depend upon purity of association.

456. The pure in mind have viruous progeny. No action that is not good is done by men of good association.

457. Good mind does good to men in their lives. Good association affords all manner of praise.

458. Though sages (perfect men) have right good minds, good association strengthens them.

459. Good mind makes heaven. Good company makes the enjoyment steady (guards the pure mind against its going astray).

460. No surer help there is than good company, and no greater woe is wrought than by evil association.

---

"Tell me the company you keep and I will tell you what you are". Evil associations corrupt good manners".

## 46. சிற்றினஞ் சேராமை

(குறள் 1, 4, 3, 5, 6, 7, 10, 9, 8, 2)

451. சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.

452. நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு.

453. மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா
மின்னா னெனப்படுஞ் சொல்.

454. மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்
கினத்துள தாகு மறிவு.

455. மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு
மினந்தூய்மை தூவா வரும்.

456. மனந்தூயார்க் கெச்சநன் றாகு மினந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.

457. மனநல மன்னுயிர்க் காக்க மினநல
மெல்லாப் புகழுந் தரும்.

458. மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநல னேமாப் புடைத்து.

459. மனநலத்தி னாகு மறுமைமற் றஃது
மினநலத்தி னேமாப் புடைத்து.

460. நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி
னல்லற் படுப்பதூஉ மில்.

## XLVII. THE WAY OF KNOWING AND DOING

(M.A. 4, 1, 5, 2, 10, 8, 3, 9, 7, 6)

461. Consider well the output, income and profit to come out of the enterprise and then undertake it.

462. Consult experts, deliberate and act. To them that do so nothing is dear or hard.

463. The wise will not encourage a transaction involving loss of capital in the hope of making large profit.

464. They who dread scorn and reporach will not launch themselves on a doubtful bargain.

465. To rise against foes without a well-thought-out plan is only to help them to grow firmly on well-prepared soil.

466. Ruin will ensue an act which ought not to be done and ruin will accrue if what ought to be done be not done.

467. Dare to do a thing after mature thought. It is shameful to say that we will think after entering on it.

468. The trouble taken to do a thing not in the right way will be in vain despite the help of many.

469. There will be a mistake in doing good if the benefaction be done regardless of the worth of the respective beneficiaries.

470. Think and do what the world will not despise. The world will not accept anything done which is unbecoming to the doer or which is infra dig to him.

---

466 and 469 are often quoted

## 47. தெரிந்து செயல்வகை

(குறள் 4, 1, 5, 2, 10, 8, 3, 9, 7, 6)

461. அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு
முதியமுஞ் சூழ்ந்து செயல்.

462. தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில்.

463. ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார்.

464. தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னு
மேதப்பா டஞ்சு பவர்.

465. வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு.

466. செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்.

467. எண்ணித் துணிக கருமந் துணிந்தபி
னெண்ணுவ மென்ப திழுக்கு.

468. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

469. நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

470. எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு.

## XLVIII. TO KNOW THE STRENGTH

(M.A. 1, 3, 2, 4, 6, 5, 7, 9, 8, 10)

471. Weigh will, before you do, the difficulty of the deed, your strength, the strength of your enemy and the force of the allies on either side.

472. To those who proceed to do a thing after knowing its feasibility and weighing well the ways and means for accomplishing it, nothing will go amiss.

473. Many have fallen in the middle of their adventure begun by them without knowing their own strength and carried away by their enthusiasm.

474. They who do not coolly think and act, who know no measure (moderation) and who are self-conceited-these will have a swift end.

475. The axle of the cart laden with light peacock feathers will snap when it is heavily over loaded.

476. They who climb the tree beyond the farthest top will pay with their life for their derring-doe or outdaring action.

477. If you wish, give, knowing measure. That is the way to preserve your wealth and share it with others.

478. It matters not though your resources be small if you are not lavish in your expenses (if you do not outdo your income).

479. The prosperity of him who does not live a life of moderation, though plausible, will soon vanish out of sight.

480. Lavish beneficence without considering the means at one's command will speedily run out his wealth and accelerate his fall.

---

471. Measure is medicine

475 & 476 are examples of pirthumolithal, (Saying different) a figure of speech.

478. Cut your coat according to your cloth.

# 48. வலியறிதல்

(குறள் 1, 3, 2, 4, 6, 5, 7, 9, 8, 10)

471. வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல்.

472. ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில்.

473. உடைத்தம் வலியறியா ருக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர்.

474. அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

475. பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.

476. நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கி
னுயிர்க்கிறுதி யாகி விடும்.

477. ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்
போற்றி வழங்கு நெறி.

478. ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை.

479. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
வில்லாகித் தோன்றாக் கெடும்.

480. உளவரை தூக்காத வொப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்.

## XLIX. 'O KNOW THE TIME

(M.A. 1, 8, 9, 10, 2, 3, 4, 5, 7, 6)

481. A crow will get the better of the owl in the day-time. A king who wishes to put down his foes must bide his time.

482. To do a thing in season is the cord that binds fortune irrevocably.

483. Is there anything impossible (under the sun) if it be done with proper means and in season.

484. The conquest of the world is feasible to him who desires it if it be attempted in season and with a proper knowledge of the place.

485. They who wish to conquer the world will bide their time unperturbed in mind.

486. The self - control (forbearance)of the courageous man of action resembles the receding of the fighting ram bent on dealing the crushing blow.

487. The wise (or intelligent men) will not burst out in anger. They will bide their time, nursing their wrath within them.

488. Put up with your foes when you see them. When you see that their fateful hour has arrived, see their heads down on the ground.

489. When the rare chance arrives, do your utmost promptly and at once.

490. Wait like the stork or crane with folded wings for the fittest time, and do like it which falls upon its prey and snatches it or souses when the fittest moment arrives.

---

481 & 490 The proper season and the fittest moment are illustrated by the respective similes of the cock and the owl and of the crane and the fish.

486. The forbearance for the time being of the man of action bent on defeating his foe is likened to the receding of the fighting ram before it makes a dreadful onslaught.

## 49. காலமறிதல்

(குறள் 1, 8, 9, 10, 2, 3, 4, 5, 7, 6)

481. பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

482. பருவத்தோ டொட்ட வொழுக றிருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு.

483. அருவினை யென்ப வுளவோ கருவியாற்
கால மறிந்து செயின்.

484. ஞாலங் கருதினுங் கைகூடுங் காலம்
கருதி யிடத்தாற் செயின்.

485. காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

486. ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

487. பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.

488. செறுநரைக் காணிற் சுமக்க விறுவரை
காணிற் கிழக்காந் தலை.

489. எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல்.

490. கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.

## L. TO KNOW THE PLACE

(M.A. 1, 8, 7, 10, 5, 9, 6, 2, 4, 3)

491. Commence no operation nor slight any till you know the place of action thoroughly.

492. Even to experts in war - craft and to men of great valour, to have a strong fort will stand in good stead.

493. Even weak foes will fight well and win if they know the scene of war, the strength of self - defence and then commence the operations.

494. Those who have counted upon triumph will abandon it if their foes know the place, then proceed, cling closely to it and fight.

495. The crocodile that is all powerful in the deep stream will be nowhere or easily defeated by any other when it gets out of it.

496. The strong - wheeled lofty car cannot sail in the sea nor can the ship that sails in the sea run on land.

497. If fought with due caution and in the right place, no other aid is needed than dauntlessness.

498. If the man of hosts besieges the citadel of a man of small forces, be may lose courage and fail in his efforts.

499. It is hard to assail a man in his own place even though he has no strong fort and great wealth.

500. The fox will have the upper hand over the fearless and ferocious elephant with lancet - smitten face when its foot is deep in the marshy land.

---

495, 496, 500 Note the apt similes of the crocodile, the car and the ship, and the fox and the elephant.

498. 'Every Englishman's house is his castle'.

## 50. இடனறிதல்

(குறள் 1, 8, 7, 10, 5, 9, 6, 2, 4, 3)

491. தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று
மிடங்கண்ட பின்னல் லது.

492. முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு மரண்சேர்ந்தா
மாக்கம் பலவுந் தரும்.

493. ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின்.

494. எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

495. நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலி
னீங்கி னதனைப் பிற.

496. கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு
நாவாயு மோடா நிலத்து.

497. அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின்.

498. சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையா
னூக்க மழிந்து விடும்.

499. சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த
ருறைநிலத்தோ டொட்ட லரிது.

500. காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு.

## LI. TO TEST AND CONFIDE

(M.A. 8, 6, 1, 7, 5, 2, 3, 4, 9, 10)

501. Virtue, wealth, pleasure and life - fear, these four tests who stand are worth confidence.

502. He alone is worth confidence who is of noble descent, free from faults, and modest, dreading stain.

503. Even in those of rare learning and flawless character, when carefully scanned, absolute freedom from ignorance is rare.

504. Scrutinize virtues and faults, and find whichever of them is more and confide.

505. One`s own deeds are the touchstone of one`s greatness and its opposite, littleness.

506. Don`t confide in men of no kindred (or character), who have neither attachment nor dread of sin.

507. To confide in unwise men out of mere fond affection will lead to endless follies.

508. One who confides in a stranger without ample scrutiny will bring on his posterity irretrievable woes.

509. Confide in none whom you have not fully tried. When once tried and taken into confidence, give each his due according to his deserts.

510. Trusting without trial and suspecting the confidant will entail incurable ills.

---

'confidence is a plant of slow growth'
The friends thou has and thier adoption tried.
Grapple them to thy soul with hooks of steel
- Shakespeare.

# 51. தெரிந்து தெளிதல்

(குறள் 8, 6, 1, 7, 5, 2, 3, 4, 9, 10)

501. அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
றிறந்தெரிந்து தேறப் படும்.

502. குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு
நாணுடையான் கட்டே தெளிவு.

503. அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா
லின்மை யரிதே வெளிறு.

504. குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல்.

505. பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்.

506. அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.

507. காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்.

508. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்.

509. தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபிற்
றேறுக தேறும் பொருள்.

510. தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும்.

## LII. TO TRY AND EMPLOY

(M.A. 3, 5, 4, 9, 1, 2, 7, 6, 8, 10)

511. He should be employed who, after a careful scrutiny of good and evil, is found to have chosen good for his guide.

512. He is fit to be employed who improves the resources. spreads plenty, and scrutinizes the obstacles to progress.

513. He must be taken as a confidant who has great love, wisdom, charity and non - avariciousness - these four virtues.

514. Many men have failed in action, though they have stood many a test otherwise.

515. None but him that knows the work well and does it patiently should be employed, not even he personally attached to the employer.

516. Let the work begin after an assurance of the expertness of the doer, of the nature of his work and of the fitness of the time for doing it.

517. Entrust the work to a man after assuring yourself that he will discharge the duty in this manner.

518. Entrust the particular work to be done to a man after ascertaining his special aptitude for it.

519. Fortune deserts him (the employer) who thinks otherwise of the intimacy of the special officer deputed for the work.

520. Let the king daily supervise the work of his officers. When these do their work aright, all will be right in the world.

---

515. Theoretically clever men are often sorry failures in practice

516. Personal intimacy should not meddle with the work of the expert.

517 - 518 Choose apt men and entrust them with the special work.

# 52. தெரிந்து வினையாடல்

(குறள் 3, 5, 4, 9, 1, 2, 7, 6, 8, 10)

511. நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும்.

512. வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய்வான் செய்க வினை.

513. அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு.

514. எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகு மாந்தர் பலர்.

515. அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று.

516. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல்.

517. இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன்கண் விடல்.

518. வினைக்குரிமை நாடிய பின்றை யவனை
யதற்குரிய னாகச் செயல்.

519. வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்குந் திரு.

520. நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

## LIII. TO CHERISH THE KINDRED

(M.A. 4, 6, 5, 1, 2, 3, 8, 7, 9, 10)

521. To show old attachment even in adversity is to be found only in the kindred.

522. If kinsmen of unabated love can be had, fortunes of diverse sorts will bud forth ever new.

523. The life of the man who is unsocial or does not freely mix with his kindred will be a waste as a full - flooded tank without a bank.

524. The good of the wealth obtained is to live encircled by one`s kindred.

525. The use of gifts and sweet words by a man is that they will bring heaps of relations to live about him.

526. A man of liberal gifts and no anger is a kinsman unsurpassed in the wide world.

527. The crow eats crying for its fellows and sharing the food with them without concealment. Fortune too will abide with only men of like nature.

528. Where the king casts no general glance but regards each in his degree, many dwell happily on that account.

529. Once kinsmen but estranged from him, they will come round when the cause of estrangement ceases to exist.

530. When a kinsman who had deserted the king goes back to him with an object, he should sit calmly and ponder over, and then receive him.

---

527. The cow's fellowship is proverbial

528. Degrees are observed by kings.

530. Great caution is needed in the case of a selfish deserter being received back into the fold.

## 53. சுற்றந்தழால்

(குறள் 4, 6, 5, 1, 2, 3, 8, 7, 9, 10)

521. பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.

522. விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
வாக்கம் பலவுந் தரும்.

523. அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

524. சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்.

525. கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும்.

526. பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில்.

527. காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு
மன்னநீ ரார்க்கே யுள.

528. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கி
னதுநோக்கி வாழ்வார் பலர்.

529. தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்
காரண மின்றி வரும்.

530. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த
னிழைத்திருந் தெண்ணிக் கொளல்.

## LIV. NOT FORGETTING

(M.A. 10, 7, 1, 3, 9, 8, 6, 4, 2, 5)

531. Worse than great indignation is forgetfulness brought about by rapturous delight.

532. Forgetfulness will kill reputation as surely as daily indigence does wisdom.

533. To the forgetful there is no fame. It is the decision of scholars of all sorts and conditions in the world.

534. The fearful have no fort (refuge). In a like manner the forgetful have no good.

535. Whoforgets to guard beforehand will repent his fault when unexpected difficulties arise.

536, There is nothing like unforgetfulness if it can be had unfailingly, at all times, and towards all.

537. There is nothing rare that cannot be won if it be cherished and done without forgetfulness (with the instrument of unforgetfulness).

538. Things praise worthy must be cherished and done. Those who despise and neglect to do them will have no joy in their sevenfold births.

539. When they are in the ecstasy of their delight and therefore self - forgetful, let them think of the ruined through self - oblivion.

540. It is easy to achieve what is thought if the mind retains what is thought without forgetfulness.

---

531. Self-fortgetfulness is often due to excessive delight.

532, 534, 536, 537 The evil effects of forgetfulness - loss of fame and all good, a fact attested by scholars of all grades.

539. Memory is the warder of the brain, and if retentive memory plays false in times of jocund jollity, the cases of those who have lost thier name and fame through their self-oblivion must be recollected.

# 54. பொச்சாவாமை

(குறள் 10, 7, 1, 3, 9, 8, 6, 4, 2, 5)

531. இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
வுவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

532. பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.

533. பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிவு.

534. அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

535. முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும்.

536. இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
வாயி னதுவொப்ப தில்.

537. அரியவென் றாகாத வில்லை பொச்சாவாக்
கருவியாற் போற்றிச் செயின்.

538. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையு மில்.

539. இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

540. உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தா
னுள்ளிய துள்ளப் பெறின்.

## LV. GOOD GOVERNMENT

(M.A. 1, 4, 7, 5, 6, 8, 9, 10, 2, 3)

541. Think well and be not partial, govern all justly and do the best. This alone is the right way or method.

542. All the world looks up to the sky for rain, and all the subjects look to the king for justice(fair play)

543. The king's sceptre has been at the bottom or prime cause of all the polite learning and virtue, or Ethics and laws.

544. The world bows at the feet of the great king who wields his sceptre for the good of his subjects.

545. Season showers and bumber crops attend the state whose king wields his sceptre according to the law.

546. It is not lance that gives victory to the king, but the sceptre, if it be not swayed amiss or inequitably.

547. The king protects all the earth, and even-handed justice guards him.

548. The inaccessible, unconsulting and unjust king sinks low in status (rank), and estimation and perishes by himself.

549. It is the king's duty, not his fault, if he protects his subjects (from foreign aggression and internal insurrection) and punishes the delinquents at home.

550. If the king inflicts capital punishment on the cruel criminals, his actions will tantamount to the farmer's weeding out the grain-growing fields.

---

545. 'Iyalpuli' - does it mean, according to what is contained in the literature of the low?

550. A similitude from the agricultural operation.

# 55. செங்கோன்மை

(குறள் 1, 4, 7, 5, 6, 8, 9, 10, 2, 3)

541. ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை.

542. வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.

543. அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்.

544. குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
னடிதழீஇ நிற்கு முலகு.

545. இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு.

546. வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின்.

547. இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்.

548. எண்பதத்தா னோரா முறைசெய்யு மன்னவன்
றண்பதத்தாற் றானே கெடும்.

549. குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்.

550. கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.

## LVI. TYRANNY (CRUEL GOVERNMENT)

(M.A. 8, 10, 2, 7, 9, 1, 4, 3, 6, 5)

551. The king who harasses and does injustice in his regime is worse or crueller than the professional murderer (assassin).

552. The king who wields his sceptre and demands a gift is like the lance-bearer who forces the wayfarer to halt and give up what he has.

553. The king who does not himself see how goes his realm will bring it to ruin day by day.

554. The king who wields his rod awry and takes no counsel will lose at once both his wealth and subjects.

555. The tears shed by subjects on account of royal tyranny or unbearable oppression are what will wear away the king's opulence (prosperity).

556. Right rule makes monarch's glory steady. Else his light will flicker and his glory will pass away.

557. As lack of rain is to the parched world, so is lack of royal grace to his subjects (living beings)

558. To one who is subject to the iron rod of a tyrant king, possession is worse than poverty.

559. If the king swerves from justice and bears away rain falls scarce and the clouds don't pour.

560. If the protector does not protect, the cattle will become scarce, adn the sages or six smiths will forget thier sacred or technical studies.

---

552. The highway robber's peremptory order to the traveller being to stand and deliver to him what he has.

555. Compare: 'Elai alutha kannir kuriya Valai Yokkum'.

558. The tyrant will oppress the rich man.

A third interpretation is the sixfold smiths and artisans: carpenter, blacksmith, stone smith, metalsmith, architect and painter. 'an-payan' - the products of cowscalves (cattle), milk (butter and ghee), manure - very necessary for agriculturists or householders. These masters of arts and crafts will case to discharge their functions when thier person and property are unprotected by rulers. The restricted interpreation with reference to the yaga performers and performance is pro-aryan. Read 'am-payan' - (ahum payan) the benefits of labour. For, Jurisprudence 132, 222, 754, 1033, kural.

## 56. கொடுங்கோன்மை

(குறள் 8, 10, 2, 7, 9, 1, 4, 3, 6, 5)

551. கொலைமேற்கொண் டாரிற் கொடிதேயலைமேற்கொண்
டல்லவை செய்தொழுகும் வேந்து.

552. வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றா னிரவு.

553. நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
னாடொறு நாடு கெடும்.

554. கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு.

555. அல்லற்பட் டாற்றா தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

556. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேல்
மன்னாவா மன்னர்க் கொளி.

557. துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
னளியின்மை வாழு முயிர்க்கு.

558. இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்.

559. முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
யொல்லாது வானம் பெயல்.

560. ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்.

## LVII. NOT TO TERRORISE.

(M.A. 1, 2, 10, 4, 8, 6, 7, 5, 9, 3)

561. He is a king who makes proper investigation and metes out punishment as a deterrent to the increase of crime.

562. They who desire to rule long and without interruption raise the rod in a terrifying manner but let it gently fall.

563. The terrorising tyrant will soon snap the bond of rule.

564. The evil word or obloquy that the king is a tyrnat, will reach his place in haste and soon cut short his life (or the downpour of rain).

565. The ample wealth of the king who is rarely accessible and whose face is frowning will be dreaded like the sight of the devil or demon.

566. If the tyrnats speaks harsh and looks cruel, his large wealth will not last long but have a short end.

567. Harsh words and severe punishments will act as a file on rough iron and wear away the tyrant-might.

568. The king who does not consult his counsellors nor think for himself but reproves in his angry mood will lose his fortune.

569. The king who does not fortify when defied by his enemy will tremble in time of war and perish quickly.

570. There is no burden for the earth heavier than the rod of the tyrant who gives his ear to tom - fools is state matters.

---

568. 'Inam' of the king - ministers, generals and others

570. Tyrants attract tomfools.

## 57. வெருவந்த செய்யாமை

(குறள் 1, 2, 10, 4, 8, 6, 7, 5, 9, 3)

561. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா
லொத்தாங் கொறுப்பது வேந்து.

562. கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்க
நீங்காமை வேண்டு பவர்.

563. வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயி
னொருவந்த மொல்லைக் கெடும்.

564. இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும்.

565. அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து.

566. கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வ
நீடின்றி யாங்கே கெடும்.

567. கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த
னடுமுரண் டேய்க்கு மரம்.

568. இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு.

569. செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்.

570. கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை.

## LVIII. COMPLAISANCE (GRACIOUSNESS)

(M.A. 1, 5, 7, 8, 9, 10, 6, 4, 2, 3)

571. The world abides for the fact that complaisance alias the beautiful, high Dame Grace exists.

572. The world wags in Graciousness. The uncomp laisant are the earth's burden.

573. Of what use is a tune if it be not accordant with the song? Of what use is the eye, if it be not endowed with graciousness?

574. Of what use is the eye seen in the face to it if it expresses no measure of grace?

575. Graciousness is the eye's adornment. Without it the eye will be deemed an ucler, (sore, wound).

576. They are like the trees implanted in the earth if their eyes cast no kindly glances.

577. The ungracious are devoid of eyes. Those who have eyes never lack complaisance.

578. Who can be gracious without prejudice to their duty have a right to (live in) this world.

579. The quality of forbearance with grace is excellent even in the case of those of vexatious temperament.

580. Those who are fond of high civilisation or civility will quietly quaff poisonous draughts though they see and know that the mixture is poisonous.

---

576. They are like the clayey puppets with eyes that do not move.

580. When the milk-oceana was chrned and the chord-serpent disgorged poison, Siva took in the poison and served the pure amirta (nectar) to the anxious gods. Hence the name Neela-kandan.

# 58. கண்ணோட்டம்

(குறள் 1, 5, 7, 8, 9, 10, 6, 4, 2, 3)

571. கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
யுண்மையா னுண்டிவ் வுலகு.

572. கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை.

573. பண்ணென்னாம் பாடற் கியைபின்றேற் கண்ணென்னாங்
கண்ணோட்ட மில்லாத கண்.

574. உளபோன் முகத்தெவன் செய்யு மளவினாற்
கண்ணோட்ட மில்லாத கண்.

575. கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும்.

576. மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்.

577. கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடை யார்
கண்ணோட்ட மின்மையு மில்.

578. கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு.

579. ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

580. பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

## LIX. TO DIRECT SPIES

(M.A. 1, 5, 10, 6, 2, 3, 4, 7, 8, 9)

581. Spies and diplomatology - these two are clearly the king's (two) eyes.

582. It is the duty of the king always to grasp quickly whatever happens to all every day.

583. Victory does not go to the king who does not know how to get at the truth out of the information furnished by his spies.

584. True spies have their eyes always on the king's officers, kith and kin, foes, over all these.

585. Clever spies are they who let not their disguise be suspected, whose eyes do not discover fear and who let no secret leak out anywhere.

586. A spy is a monk in disguise, a vertible ascetic, who makes thorough investigation and who does not fall back, whatever men do to him or whatever befalls him.

587. A spy is he whose ear is alive to dark secrets and who renders a clear report of the facts gleaned by him.

588. It is well to ascertain truth from the spies reports by comparing them with what other spies have reported.

589. Manage to see that one spy does not know or come into contact with another. If three spies report alike, take that to be truth.

590. Don't reward the spies in public. If you do so, all the secrets will be out, and no privacy can be kept up.

---

Every government knows the worth and values the service of the Secret Intelligence department for the detection of crimes.

# 59. ஒற்றாடல்

(குறள் 1, 5, 10, 6, 2, 3, 4, 7, 8, 9)

581. ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண்.

582. எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் தொழில்.

583. ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில்.

584. வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று.

585. கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
முகாஅமை வல்லதே யொற்று.

586. துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று.

587. மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
யையப்பா டில்லதே யொற்று.

588. ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோ
ரொற்றினா லொற்றிக் கொளல்.

589. ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்.

590. சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை.

## LX. THE WEALTH OF ENERGY

(M.A. 1, 2, 8, 4, 3, 5, 7, 9, 10, 6)

591. The rich are those who have energy. The unen- ergetic own nothing, whatever else they possess.

592. To have energy or courage is real wealth. Riches will not last but will take wings.

593. They who have the wealth of concenterated energy will never cry in despair, that they have lost their wealth or fortune.

594. Good fortune seeks him out, (his path) who has inflexible energy.

595. The measure of the luxuriant growth of the flower is the measure of the water supplied to it. The status of men depends on the stock their energy.

596. Aim loftily whatever you think of. Have high ideals. Though they may fail, they will not have the nature of character of failure but will be grand.

597. Men of energy quail not in case of defeat or failure, as the elephant keeps up its majesty though it be smitten by deadly arrows.

598. The unenergetic dull men can never attain the pride of being liberal patrons in the world or of saying proudly we are liberal in gift.

599. Though the elephant be huge in bulk and armed with sharp-pointed tusks, it will be terrified when the tiger attacks it.

600. Real strength is the wealth of Energy or spirit. Those who are devoid of it are different. They are but trees, though in human form.

---

595. 'Failures are pillars of success'.

"Still through our paltry stir and strife Glows down the high ideal" - (J.R. Lowell).

How far high failure overleaps the bound of her successes - (Lewis Morris).

Better to have failed in the high aim, as I, Than vulgarly in the low aim succeed - (R. Browning)

## 60. ஊக்கமுடைமை

(குறள் 1, 2, 8, 4, 3, 5, 7, 9, 10, 6)

591. உடைய ரெனப்படுவ தூக்க மஃதில்லா
ருடைய துடையரோ மற்று.

592. உள்ள முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்

593. ஆக்க மிழந்தேமென் றல்லாவா ருக்க
மொருவந்தங் கைத்துடை யார்.

594. ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா
வூக்க முடையா னுழை.

595. வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
முள்ளத் தனைய துயர்வு.

596. உள்ளுவ தெல்லா முயர்வுள்ளல் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து.

597. சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு.

598. உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு.

599. பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

600. உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு.

## LXI. NOT BEING INDOLENT

(M.A. 3, 1, 2, 4, 7, 6, 10, 5, 8, 9)

601. The family which is a never-failing lamp will go to pot when it is affected by the taint of indolence.

602. They who desire to maintain the dignity of the family will avoid indolence which kills endeavour.

603. The family which has given birth to the ignorant man who fosters ruinous indolence will perish before him.

604. Those who, clasped in the arms of indolence, do not strive to do noble things, will wreck their family and increase their faults.

605. Procrastination, oblivion, indolence and sleep - these four make the yacht for those who are doomed to perdition.

606. Though in the good graces of the lords of the earth, the indolent will hardly attain good gain.

607. They who do not strive to do noble things owing to their love of indolence will not only be rebuked but treated with insolence.

608. If indolence finds it habitate in a noble family, it will enslave them to their foes.

609. If one will give up his subjection to indolence, he will save himself from all the faults that have overtaken the governance of the family.

610. The king who is not indolent will gain en masse all that was covered by the foot of the god who measured the world.

---

605. The sinking pleasure - boat.

607. The contrast of the two sisters.

610. Trivikrama, an avatar of Vishnu, measured the three worlds in three steps to the discomfiture of the Emperor Bali.

# 61. மடியின்மை

(குறள் 3, 1, 2, 4, 7, 6, 10, 5, 8, 9)

601. குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னு
மாசூர மாய்ந்து கெடும்.

602. மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.

603. மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து.

604. குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு.

605. நெடுநீர் மறவி மடிதுயி னான்குங்
கெடுநீரார் காமக் கலன்.

606. படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்
மாண்பய னெய்த லரிது.

607. இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர்.

608. மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும்.

609. குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும்.

610. மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு.

## LXII. MANLY EXERTION

(M.A. 2, 3, 5, 6, 1, 7, 4, 8, 9, 10)

611. Don't faint that anything is hard or impossible. Strenuous exertion achieves greatness.

612. Take care that in action there is no failure (you avoid defeat). The world does not care for those who leave their work incomplete.

613. In the dignity of strenuous labour lies the pride of doing service to others.

614. Beneficnence (benefaction) in the case of one who makes no manly exertion is as unavailing as the sword held by a hermaphrodite.

615. He who desires no pleasure but is fond of action is the steady pillar of his kindred whose grief is redressed by him.

616. Manly exertion brings on fortune. Its absence (non-exertion) will steep in indigence.

617. The wise say that Black Misfortune will find her abode in indolence. The unslothful man has in his feet (exertion) her of the lotus flower.

618. It is no blame if one is not favoured by fortune. It is a disgrace if he consciously or wantonly puts forth no exertion.

619. Though Divinity (good deed) does not help you to win, physical labour will pay or have its hire or wages.

620. Those who strive strenuously, unflinchingly or perseveringly will see the black of the relentless Fate of the Doom.

---

613, 614, 616 are oft quoted.

620. Patience and perservance will overcome mountains.

## 62. ஆள்வினையுடைமை

(குறள் 2, 3, 5, 6, 1, 7, 4, 8, 9, 10)

611. அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

612. வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு.

613. தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு.

614. தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்.

615. இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண்.

616. முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்.

617. மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான்
தாளுளா டாமரையி னாள்.

618. பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி.

619. தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

620. ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

## LXIII. UNDAUNTEDNESS IN STRAITS

(M.A. 1, 6, 3, 4, 5, 8, 7, 2, 9, 10)

621. Smile when trouble comes. Nothing efficient like the cheerful or smiling face to meet and overcome distress.

622. Flood-like sorrow will vanish when the wise man thinks of it in his mind or spends his thought over it.

623. Those who do not succumb in straits will see distress itself (in the face) when put to straits.

624. He who plods like the bull to get over impediments whereever beset with them will see the impediment itself put to trouble.

625. The troubles of him who does not succumb to clustering woes will themselves be put to grief.

626. They who do not stint in times of prosperity, will they grieve that they are in straits, in times of adversity?

627. The wise who know that the human body is a target unto misfortune will not look upon troubles as distress.

628. He who does not desire pleasure and who says that trouble is natural to man never feels affliction when he is overtaken by it.

629. He who does not desire pleasure in times of joy never feels calamitiuos when calamity overtakes him.

630. If a man takes pain as pleasure, that is an excellence in him extolled by his enemies.

---

Man is sorrow-born. Pessimism, rather stoicism, is a powerful defence against the storm and stress of life. Sages look upon pleasure and pain alike. Enemies extol undauntedness in trouble or intrepidity in misfortune as a rare virtue.

627, 630 Highly philosphic

# 63. இடுக்கணழியாமை

(குறள் 1, 6, 3, 4, 5, 8, 7, 2, 9, 10)

621. இடுக்கண் வருங்கா னகுக வதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில்.

622. வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
னுள்ளத்தி னுள்ளக் கெடும்.

623. இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர்.

624. மடுத்தவா யெல்லாம் பகடன்னா னுற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து.

625. அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும்.

626. அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புத றேற்றா தவர்.

627. இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதா மேல்.

628. இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
துன்ப முறுத லிலன்.

629. இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்
முன்ப முறுத லிலன்

630. இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
னொன்னார் விழையுஞ் சிறப்பு.

## LXIV. THE MINISTRY

(M.A. 5, 1, 6, 4, 3, 2, 7, 8, 10, 9)

631. A minister is he who is wise in the choice of means, season and action and skilled in execution of rare enterprise.

632. A great minister is he who is brave and fearless, people protecting, learned, manly in his exertion, these four making five with the requisites mentioned already.

633. An able minister is he who knows how to divide the foes, to bind the friends and unite the divided.

634. A powerful minister is he who sees things, does after mature thought and gives out his decision positively.

635. An expert minister is he who knows virtue, and who always offers wise and timely counsels in well-thoughtout and pleasant words.

636. Subtle mind, knowledge of science - to those who possess these, what is there more subtle and surpassing?

637. Though well-versed in books, a tactful minister needs the experience or knowledge of the ways of the world.

638. it is the duty of the minister (side-sitter) to give out decisively what is right and true though the kind be unwise and throws away his counsel.

639. Better than an evil designing (conspiring) minister are seventy crores (countless) of internal, secret or treacherous foes by the king's side.

640. A tactless or an unskilful minister does nothing decisively though he plans rightly or perfectly.

---

Manakkudavar takes kudi-katthal, as people-protection and sense-control, as two, and thereby makes out the five requistes, without any referece to the preceding couplet, and he differs in this point from the ingenious Parimelalakar. When doctors differ, plain common-sense must decide.

637. Experience is more indispensable to a minister than mere book-knowledge.

# 64. அமைச்சு

(குறள் 5, 1, 6, 4, 3, 2, 7, 8, 10, 9)

631. கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
மருவினையு மாண்ட தமைச்சு.

632. வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு.

633. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.

634. தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

635. அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்
திறனறிந்தான் றேர்ச்சித் துணை.

636. மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை.

637. செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல்.

638. அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன்.

639. பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ
ரெழுபது கோடி யுறும்.

640. முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர்.

## LXV. ELOQUENCE (PERSUASIVE SPEECH)

(M.A. 10, 5, 4, 9, 1, 3, 8, 2, 6, 7)

641. The advantage of the tongue-virtue is not included in anyone but stands alone and apart from all other advantages.

642. Prosperity and adversity or good and evil, spring from it and so guard yourself against the use of wrong (or inapt or ill-timed) words.

643. It is Eloquence that holds the rapt attention of the hearer and makes those who have not heard desire to hear.

644. Weigh each word and speak. Better than that is neither virtue nor sense (profit).

645. Speak out your words, making sure that the word of none other can refute your own.

646. To speak so well that the audience may desire to hear the speech again (cry galore) and to seize the sense of what others speak so as to be benefited by it-these are the aims of great men of spotless virtue (or power).

647. The man powerful in speech, unfatiguing or unforgetful in mind and fearless in word, it is hard for any hostile power to overcome.

648. The world will hasten to obey the command of eloquent speakers who can speak uniformly sweet language.

649. They who are not deft in the use of a few choice words in a clear manner will desire to be profuse in their speech.

650. They who are not able to expatiate effectively on what they have learned are like unto a bunch of blossoms without fragrance.

---

642. Compare Auvai: 'sol sorvu padale'

649. A caution against verbosity and profuseness.

# 65. சொல்வன்மை

(குறள் 10, 5, 4, 9, 1, 3, 8, 2, 6, 7)

641. நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று.

642. ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

643. கேட்டார்ப்பி ணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்.

644. திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில்.

645. சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து.

646. வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடன்
மாட்சியின் மாசற்றார் கோள்.

647. சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
யிகல்வெல்லல் யார்க்கு மரிது.

648. விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

649. பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்ல றேற்றா தவர்.

650. இணருழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார்.

## LXVI. PURITY IN ACTION

(M.A. 1, 2, 3, 6, 4, 5, 10, 7, 8, 9)

651. Good alliance makes success. Good action gives whatever is desired.

652. An action which makes for neither glory nor good must always be avoided.

653. Those who desire to fare well (rise high) in the world (ambitious aspirants) must shun the deed that will kill glory.

654. Those who see things steadily and clearly through, will never do mean things though they are fallen on evil times.

655. Don't do anything that you will repent for and deplore. Why should a like sin be done again? It is good that it is eschewed.

656. Though he sees his own mother starving out, let him not do the deed that sages will condemn.

657. Better the utter indigence of the sages than the good fortune made in guilty ways.

658. Those who for selfish gain do not shun what is forbidden will suffer later on for the evil deed though it be *fait accompli* now.

659. All that is won by making others shed tears will vanish with the tears shed. All good deeds that are attended with loss now may prove blessings in after days.

660. To feel over joyed at the making of fortune by evil designs is, as it were, to pour water into an unbaked pot in the hope of retaining it.

---

653. Reduplicated vowels intensify the sense

656. Oft quoted

660. Will slowly but surely ooze out.

## 66. வினைத்தூய்மை

(குறள் 1, 2, 3, 6, 4, 5, 10, 7, 8, 9)

651. துணைநல மாக்கந் தருஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும்.

652. என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.

653. ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர்.

654. இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

655. எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேன்
மற்றன்ன செய்யாமை நன்று.

656. ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

657. பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை.

658. கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதா
முடிந்தாலும் பீழை தரும்.

659. அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை.

660. சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று.

## LXVII. FIRMNESS IN ACTION

(M.A. 3, 4, 8, 5, 10, 1, 9, 6, 7, 2)

661. What is called firmness in action is one's firmness in mind. All other things are external (non-essential).

662. To overcome each obstacle, not to fiant when hindered - these two are the guiding principles of the learned (men of knowledge and research).

663. It is manliness to let out in the end what is worthy of action. If it be let out in the middle, it will work irretrievable ruin.

664. It is easy for all to say a thing : It is rare to act out one's word.

665. The firmness in action of the meritorious great will not only be applauded by the king but esteemed by all.

666. If those who think become firm in mind, they will achieve their object exactly as they think.

667. Don't despise men for their puny appearance. There are (small) men who are like the linch-pin of the big rolling car.

668. What the eye clearly sees as right in action must be done with a mind unperturbed and without going to sleep or vigilantly.

669. Though toil and trouble beset you in what you do, do with a firm will what will yield pleasure and profit in the end.

670. Whatever firmness one may attain, the world will not desire those who do not go in for firmness in action.

---

664, 666, 667 Oft quoted.

664. I can casier teach twenty what were good to be done than be one of the twenty to follow mine own instruction - (Shakespeare)

# 67. வினைத்திட்பம்

(குறள் 3, 4, 8, 5, 10, 1, 9, 6, 7, 2)

661. வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற.

662. ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி
னாறென்ப ராய்ந்தவர் கோள்.

663. கடைக்கொட்கச் செய்தக்க தாண்மையிடைக் கொட்கி
னெற்றா விழுமந் தரும்.

664. சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்.

665. வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க
ணூறெய்தி யுள்ளப் படும்.

666. எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணியராகப் பெறின்.

667. உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து.

668. கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது
தூக்கங் கடிந்து செயல்.

669. துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை.

670. எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு.

## LXVIII. HOW TO EXECUTE

(M.A. 5, 6, 8, 7, 1, 2, 3, 4, 10, 9)

671. The end and aim of consultation is resolution. If that decision be delayed in exectuion, it is a grievous fault.

672. What ought to be done with deliberation may be done leisurely. What ought to be executed promptly, don't sleep over.

673. Execution is good wherever it is possible. If not possible or feasible, wait and do when it becomes feasible or when the path is clear.

674. Both work and enmity, if left incomplete, will bring ruin like the smouldering fire, if it be well thought over.

675. Execute after clear and careful deliberation of the ready resources, the instrument, the season, the nature of the action - these five.

676. The end, hindrance and profit from the execution must be thought over before sitting to work.

677. Consult the expert who knows the work, the method of doing it and the secret thereof in order to execute it well.

678. Execute a thing by means or with the help of another who has already done just as an elephant is caught with the help of another rutty elephant.

679. To conciliate or cling to foes in crisis is more to be longed for than to reward or do good to friends.

680. The lesser ruler, afraid of internal insurrection, will bow his head to the greater ruler, when a favourable opportunity offers itself and accept the terms offered.

---

This Chapter contains expert advice to rulers and administrators of all times

## 68. வினைசெயல்வகை

(குறள் 5, 6, 8, 7, 1, 2, 3, 4, 10, 9)

671. சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குத றீது.

672. தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

673. ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற்
செல்லும்வாய் நோக்கிச் செயல்.

674. வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற்
றீயெச்சம் போலத் தெறும்.

675. பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்.

676. முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

677. செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை
யுள்ளறிவா னுள்ளங் கொளல்.

678. வினையான் வினையாக்கிக் கோட லனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

679. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
யொட்டாரை யொட்டிக் கொளல்.

680. உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்
கொள்வர் பெரியார்ப் பணிந்து.

## LXIX. THE AMBASSADOR

(M.A. 1, 5, 3, 4, 7, 8, 9, 2, 6, 10)

681. Kind heart, noble birth, the courtesy that kings love - these are the qualities of the ambassador.

682. Love, wisdom, exquisite eloquence are the indispensable qualifications of the diplomatic messenger.

683. To be past master in learned lore amidst the learned is the characteristic of the man who assures victory to his lancet-master.

684. Intelligence, a majestic appearance, exquisite knowledge, he who has these three in plenty, is fit to go on embassies.

685. He who is concise in speech, who eschews unpleasant language and utters sweet words is the political messanger who will profit his lord.

686. He is the right ambassador who is well-learned, who has fearless look, who clinches his arguement and knows what is fit for the occasion.

687. He is the best royal messenger who knows his duty, fit time and place, and ponders well before he delivers his message.

688. He who truly possesses the three qualifications of pure heartedness, firm mindedness and sufficient resources is a well-devising state messenger.

689. He who delivers the state message to kings must be fearful in his eye and unfaulty in the subject matter and language.

690. The faithful ambassador is he who assures success or profit to his lord thought he runs himself thereby into the jaws of death.

---

The envoy differs from the ambassador, though both are carriers of the royal errand. The former is a diplomatic messenger of the second order whereas the latter is one of the highest order.

# 69. தூது

(குறள் 1, 5, 3, 4, 7, 8, 9, 2, 6, 10)

681. அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.

682. அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று.

683. நூலாரு ணூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.

684. அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு.

685. தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாம் தூது.

686. கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற்
றக்க தறிவதாந் தூது.

687. கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை.

688. தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

689. விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

690. இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.

## LXX. COMPORTING IN ROYAL PRESENCE

(M.A. 7, 5, 6, 3, 4, 1, 2, 10, 8, 9)

691. They who move in the royal presence of a heroic nature must comport themselves like those who warm themselves at the fire, neither nearing it nor keeping apart from it.

692. Not to desire what kings long for will acquire lasting affluence at their hands.

693. Who would be wary or cautious should beware graver faults. It is hard for anybody to remove suspicion when once it is roused.

694. In the presence of the supremely great, don't indulge in ear-whispers or in face smiles.

695. Don't seek to know nor ask for the royal secret. It is proper to give ear to the king only when he lets it outhimself.

696. Tell not kings what they dislike, tell them what they like in a pleasing manner, and that too, knowing the royal mood and considering the season.

697. Tell what please them. Never tell, though they press you, what is unprofitable.

698. Those who do not treat kings with irreverence, saying `they are my juniors and my kinsmen', will comport themselves in permanent glory.

699. Think not we stand in their good graces, nor do nay unworthy deed. That is what sages of clear vision never do.

700. Too much familiarity with kings, deeming them old friends and doing unworthy deeds will bring sure ruin.

---

691. Oft quoted

694. advice administered as to how to comport in the presene of superiors.

698 & 700 Neither juniority nor kinship not old friendship will justify unseemly behaviour in the royal presence.

# 70. மன்னரைச் சேர்ந்தொழுகல்

(குறள் 7, 5, 6, 3, 4, 1, 2, 10, 8, 9)

691. அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
விகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.

69.2 மன்னர் விழைப விழையாமை மன்னரான்
மன்னிய வாக்கந் தரும்.

693. போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
றேற்றுதல் யார்க்கு மரிது.

694. செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக
லான்ற பெரியா ரகத்து.

695. எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்காற் கேட்க மறை.

696. குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்.

697. வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல்.

698. இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
வொளியோ டொழுகப் படும்.

699. கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்.

700. பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும்.

## LXXI. JUDGING BY LOOKS

(M.A. 7, 8, 10, 6, 5, 2, 1, 9, 4, 3)

701. He who knows by looks what passes in another's mind without his telling it is ever an ornament to the world surrounded by the unchanging sea.

702. He who reads the thoughts of others without their knowing it will be looked upon as Divinity itself.

703. Those who by looks make out the aim or intention of others must be pressed into service at whatever cost, even by bribing or offering presents.

704. Those who make out the aim of others without its being expressed in words may be one in form with others, but are different in other respects.

705. Of all the members of the body, how is the eye more precious if it be not able to interpret one's intention from one's looks?

706. Like the mirror that reflects the form of what is near, the face will show what has seriously affected the mind.

707. Is there anything wiser or subtler than the face? It will fore-show what joy or anger passes in (possesses) the mind.

708. To look at the face is enough if men look within and interpret the hidden thought.

709. The eye speaks out both hatred and friendship to those who can interpret the eye's manifold glances.

710. If it be scanned what is the measuring rod of those who profess themselves to be highly discerning, it will be found to be nothing else than the eye.

---

702. He is surely a divine being who can divine the secret thoughts of others.

705. The face and the eye are the true revealers of the mind's afflictions. 706. Oft quoted

706, 707, 708 refer to the face, 709 & 710 to the eye.

# 71. குறிப்பறிதல்

(குறள் 7, 8, 10, 6, 5, 2, 1, 9, 4, 3)

701. கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று
மாறாநீர் வையக் கணி.

702. ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தொ டொப்பக் கொளல்.

703. குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்.

704. குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு.

705. குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு
ளென்ன பயத்தவோ கண்.

706. அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்.

707. முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங்
காயினுந் தான்முந் துறும்.

708. முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
யுற்ற துணர்வார்ப் பெறின்.

709. பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின்.

710. நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற்
கண்ணல்ல தில்லை பிற.

## LXXII. TO KNOW THE COURT (AUDIENCE)

(M.A. 1, 3, 10, 2, 5, 4, 6, 7, 8, 9)

711. Let the pure who have truly and well understood the words and their shades of sense speak to the Court or audience with a full knowledge of the same.

712. Good men, expert in the usage of words, should choose the occasion and speak what they have well thought out.

713. Those who presume to address the Court assembly or audience without knowing its nature do not know the power of persuasive diction, nor are they good for anything else.

714. To shine bright before the men of light is like looking pale or white like pure plaster before dull fools.

715. The best of all that is good is the full self restraint, not to advance to speak in the society of elders.

716. As is the fall of one in the path tottering in ennui, so is the failing in the presence of men well-versed in great spiritual truths.

717. The learning of the learned sheds lustre in the presence of those who know words very well, without fault.

718. To speak before a learned audience is pouring water on a prepared patch of growing grain.

719. Those who speak well and persuaively in a good assembly ought not to speak in the assembly of fools even in forgetfulness.

720. Like ambrosia spilt in the gutter or drain is addressing an assembly of aliens, or of those who are unsimilar to them in their worth.

---

714, 720. Oft Quoted

711, 712, 713. refer to words - thier collection, usage and arrangement.

719. Compare Naladiar 'Surai Vitthu polum tham pal'.

# 72. அவையறிதல்

(குறள் 1, 3, 10, 2, 5, 4, 6, 7, 8, 9)

711. அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர்.

712. இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லி
னடைதெரிந்த நன்மை யவர்.

713. அவையறிவார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉ மில்.

714. ஒளியார்முன் னொள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.

715. நன்றென் றவற்றுள்ளு நன்றே முதுவருண்
முந்து கிளவாச் செறிவு.

716. ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல
மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு.

717. கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து.

718. உணர்வு துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று.

719. புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையு
ணன்கு செலச்சொல்லு வார்.

720. அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல்.

## LXXIII. NOT FEARING COUNCIL OR ASSEMBLY

(M.A. 10, 3, 1, 2, 9, 5, 6, 4, 7, 8)

721. Pure-hearted men, well-versed in the collection or in the full force of words, will not speak in vain in a learned assembly as they know the order or arrangement of words.

722. They who are called learned among the learned are those who have learned to speak what they have learned in a persuasive manner.

723. Many are those weak men who die in the midst of foes. Rare or few are the undaunted in an assembly.

724. Speak what you have learned before a learned assembly in a persuasive or convincing manner, and learn what more you can glean from the mouths of more learned men.

725. Learn logic, if possible and learn that, with a view to give an apt reply without nervousness in a learned coterie.

726. What can the sword avail to those who have not the fierce eye? What can books avail to those who dread an assembly of keen witted men?

727. Like the shining sword in the hand of the eunuch is the book knowledge acquired by one who is afraid of the learned assembly.

728. Those who have acquired knowledge of diverse kinds have no use if they cannot speak well and persuasively in a good or choice assembly.

729. The worst among the unlearned are they who though learned, dread, the assembly of good men.

730. They who, in dread of the learned coterie, cannot expound what they have learned, in a persuasive manner, are dead as well, though they live, move and have their being.

---

729. The Council or assembly is differentiated as strong, subtleminded or good, and words have been classified into strong and forcible or those of full import.

725. The all-importance of logic study for cogent reasoning. The repetition of the simile here.

730. The walking dead are the nervous learned.

## 73. அவையஞ்சாமை

(குறள் 10, 3, 1, 2, 9, 5, 6, 4, 7, 8)

721. வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர்.

722. கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்றசெலச் சொல்லு வார்.

723. பகையகத்துச் சாவா ரெளிய ரரிய
ரவையகத் தஞ்சா **தவர்.**

724. கற்றார்முற் கற்றசெலச் சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல்.

725. ஆற்றி னளவறிந்து கற்கவவை யஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

726. வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடெ
னுண்ணவை யஞ்சு பவர்க்கு.

727. பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல்.

728. பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையு
ணன்கு செலச்சொல்லா தார்.

729. கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்தும்
நல்லா ரவையஞ்சு வார்.

730. உளரெனினு மில்லாரொ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்.

## LXXIV. THE LAND OR COUNTRY

(M.A. 4, 7, 9, 5, 6, 8, 1, 2, 3, 10)

731 That is the land or country where harvests are full and unfailing where worthy men live, and where men of ample wealth reside, where all these are found.

732 That is the land or country which is desired for its ample wealth and which yields much, unaffected by dire evil or pests.

733 That is the land or country which bears all heavy burdens without murmur when inevitable and pays full tributes to the king without praying for reduction.

734 That is the land or country which fares free from fierce famine, wasting plague, and ravages of enemies.

735 That is the land or country which is free from factions, desolating civil strife, and assassins harrasing kings.

736 The chief of all lands is that country which knows no danger, and which yields in full, even when it is ravaged.

737 Both rain and spring water, well-situated mountain, mountain stream, strong fort - these are indispensable factors to the land or country.

738 Absence of disease, wealth, crop, joy, defence - these five are called oranments to the land or country.

739 That is the land or country which yields abundance when it is sought (with toil).

740 Even if the land or country be lessed with or enjoys all these blessings, it is no good if it has no king to rule it in peace.

---

The requisites of a good land or country are enumerated in this chapter. Chief among these are wealth, good yield, fertile soil, good rule, strong fort and the absence of disease, faction, famine and revolt.

739. Natural yield without labour marks out a good land or country.

# 74. நாடு

(குறள் 4, 7, 9, 5, 6, 8, 1, 2, 3, 10)

731. தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு.

732. பெரும்பொருளாற் பெட்டக்கத் தாகி யருங்கேட்டா
லாற்ற விளைவது நாடு.

733. பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு.

734. உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு.

735. பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்
கொல்குறும்பு மில்லது நாடு.

736. கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை.

737. இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு.

738. பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம
மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.

739. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு.

740. ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயனின்றே
வேந்தமை வில்லாத நாடு.

## LXXV. FORTRESS

(M.A. 1, 2, 3, 5, 6, 7, 8, 10, 4, 9)

741 A fortress is essential to those who attack foes. It is equally an object of importance to those who defend themselves fearing foes.

742 A fortress is that which has crystal water, an esplanade or open space, a mountain, and the cool shade of the beauteous forest hard by.

743 Height, breadth, strength, impregnability - these four are the requisities of fortresses with embattlements according to science.

744 A fortress is that which needs slight defence and which is spacious, and capable of taxing hard the energy of foes.

745 A fortress is that which is invulnerable, has abundance of food for those inside and facility of defence for the defending forces.

746 That is a good fortress which has ample munitions of all kinds and good reserves for defence in times of exigency.

747 That is a veritable fortress which cannot be taken by a regular siege, by storming or by mining underground.

748 However strong the besiegers be, a fortress should be impregnable and give the besieged (those within) victory.

749 A fortress is what will dishearten the besieging foes at the outermost enclosure and attain greatness by brave defensive works of all kinds.

750 However grand or strong a fort may be, it avails nothing if the defenders are craven souls, showing no vigour in action.

---

743. Shows the author's knowledge of the science of fortification.

749. Rout the foes before they approach the fortress.

750 Whatever the defence-works, the degenders must be strong to win victory.

# 75. அரண்

(குறள் 1, 2, 3, 5, 6, 7, 8, 10, 4, 9)

741. ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள்.

742. மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண்.

743. உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி
னமைவர ணென்றுரைக்கு நூல்.

744. சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண்.

745. கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண்.

746. எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவும்
நல்லா ளுடைய தரண்.

747. முற்றியு முற்றா தெறிந்து மறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண்.

748. முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ தரண்.

749. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுற்றி
வீறெய்தி மாண்ட தரண்.

750. எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண்.

## LXXVI. HOW TO ACQUIRE WEALTH

(M.A. 8, 10, 9, 3, 2, 4, 7, 5, 1, 6,)

751 There is nothing like wealth that can make a man of no consequence a man of worth.

752 All will despise the poor or the destitute, i.e. those that have nothing. All will laud the wealthy or the opulent.

753 Wealth called an unfailing lamp, goes to every place designed and dispels darkness or quells enmity.

754 Wealth acquired by right or blameless means yields virtue and pleasure.

755 Wealth, not acquired with grace and love, the world will not touch but cast off.

756 Wealth inherited as escheats and derelicts, received as toll, tax or custom, taken as war - prize from defeated foes, belongs to the king.

757 Grace, the child yeaned by love, is reared by wealth, called the cherishing nurse.

758 He who does a thing with money in his hand (ready cash) can go on with it without anxiety as one who climbs a hill and witnesses the elephant - fight from fear - free.

759 Make money. No keener or sharper steel is there than that which can cleave the foeman's pride.

760 They who have acquired glorious wealth in plenty will easily gain the other two together (virtue and pleasure).

---

751. The play upon the word 'porul' signifying wealth and consequence. 752. Worldly experience. 751, 752 Oft quoted.

753. Wealth as true lamp. 756. The sources of state revenue.

757. Wealth as good foster-mother.

758. Money makes many things. Money makes the mare to go. Ready cash rids fear.

## 76. பொருள்செயல்வகை

(குறள் 8, 10, 9, 3, 2, 4, 7, 5, 1, 6)

751. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்.

752. இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு.

753. பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு
மெண்ணிய தேயத்துச் சென்று.

754. அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.

755. அருளோடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்.

756. உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்.

757. அருளென்னு மன்பின் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு.

758. குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை.

759. செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
மெஃகதனிற் கூரிய தில்.

760. ஒண்பொருள் காழ்ப்பா வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு.

## LXXVII. THE GLORY OF AN ARMY

(M.A. 1, 6, 8, 2, 5, 3, 4, 7, 10, 9)

761 It is the chiefest of the treasures of a king bent upon winning victory to have a puissant army which is well - organised and does not fear danger.

762 It is rare but for a veteran host fearlessly to brave a mighty foe at a time of danger or in a desperate situation.

763 Of what avail is the Ocean - billow`s roar? When the cobra breathes, the rat - enmity will be nowhere or nothing.

764 That is a host which braves defeats and which recks not desertions, being famous for its hereditary courage from generation to generation.

765 That is a host which unites its ranks and is able to withstand even though Yama, the God of Dealth, in a fiery fit falls upon it.

766 Valour, honour, right procedure based on experience and trust only these four are sure defence to a host.

767 An army which bears the attack of the forlorn hope is valiant and well - disciplined to encounter the invading force with success.

768 Though the army be devoid of dash or power of endurance, it will gain a name if it be well - organised and disciplined.

769 An army will win glory if it be not reduced in strength, if it be implacable or unappeasable in hatred, and if it has no fall in rations or be not reduced to straits for lack of provisions or not irregularly paid.

770 Even though an army be composed of large numbers of warriors, it will be of no use unless it has or is led by able commanders.

---

761, 762 Troops consist of veterans and victorious warriors.

763. Mere numbers will not do.

770. Rank and file without good generals will be of no use.

# 77. படைமாட்சி

(குறள் 1, 6, 8, 2, 5, 3, 4, 7, 10, 9)

761. உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை.

762. உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது.

763. ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.

764. அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.

765. கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு
மாற்ற லதுவே படை.

766. மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற
மெனநான்கே யேமம் படைக்கு.

767. தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து.

768. அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும்.

769. சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு
மில்லாயின் வெல்லும் படை.

770. நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில்.

## LXXVIII. THE WARRIOR`S PRIDE

(M.A. 4, 3, 2, 5, 6, 7, 8, 1, 9, 10)

771 Stand not before my war - lord, o ye foes. Many who faced my war - lord now stand in stone.

772 Better than he who slays the forest hare with his arrows is he who aims his dart at an elephant and fails.

773 Heroic greatness is fierce valour in times of peril, say the wise. To be chivalrous - kind to the fallen foes gives it its edge.

774 He who hurls the javelin in hand at the elephant and comes away from the fray, plucks it out of his smitten breast when there is need for it.

775 If a hero winks his fierce - glancing or stern eye, when the lance is hurled at it, is it not a shame or defeat to him?

776 All the days when heroes sustain no wound in glorious battle will be counted as days lost and set apart as vain.

777 They who risk their life in the desire for fame in the revolving earth wear their heroic anklet something like a beautiful ornament.

778 Heroes who dread no their lives in perilous times are unabated in their nenthusiasm even when their king frowns.

779 Who will condemn the failure of heroes who die to keep up their vow(did lest their vow fail)?

780 If heroes lose their lives at the sight of which their king`s eyes are brimming with tears, to have such a death is worthy to be begged for.

---

771. 'Veera-kal' as a memento of a hero's death in the thick of the fight.

776. Oft-quoted. Compare: 'Count that day lost whose low descending sun hath not seen any worthy action done'. "I have lost a day the prince who nobly cried, had been an Emperor without his crown" - (young)

## 78. படைச்செருக்கு

(குறள் 4, 3, 2, 5, 6, 7, 8, 1, 9, 10)

771. என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர்.

772. கான முயலெய்த வம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது.

773. பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு.

774. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.

775. விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி
னொட்டன்றோ வன்க ணவர்க்கு.

776. விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து.

777. சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

778. உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர்.

779. இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்.

780. புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து.

## LXXIX. FRIENDSHIP

(M.A. 1, 9, 7, 3, 8, 2, 10, 4, 5, 6)

781. What thing like it is there which is rare to achieve like friendship? What rare defence is there for doing good?

782. The friendship of the worthy, as days pass, waxes as the waxing (crescent) moon, and the friendship of the foolish is course of time wanes as the full moon does day by day (till it is new moon)

783. The friendship of the good grows with time as the beauty of a poem (treatise) is appreciated more and more as each time it is revised.

784. It is not for deriding or ridiculing that friendship is made, but it is for sharply reproving when the friend goes much astray.

785. Frequent contact is not necessary for friendship; feeling alone affords the right or claim of true friendship.

786. True friendship is not the smiling face, but it is the rejoicing of the heart within when friend meets friend.

787. Friendship rescues friend from ruin and directs him in the right path and weeps with him in times of troubles.

788. Like the hand that unsolicited hurries on to help the man whose garment has slipped away or is blown aside, friendship hastens to weed out the grief or redress the grievance of a friend.

789. If it be asked where friendship holds its court or has its royal seat, it is in the firm mind which lends a ready hand in a time of need, or at a critical juncture.

790. Base is the friendship which brags 'he (the friend) is related thus to me' and 'such is my worth to him.'

---

This chapter has many oft-quoted couplets. 783, 784 785, 788 in particular.

785. Constant contact and companionship is one interpretation is one interpreation. Note the story of Piciranthaiyar and Ko-Perum Cholan. Vide stanzas 216 to 228 Purana nurru. 788 A friend in need is a friend indeed.

# 79. நட்பு

(குறள் 1, 9, 7, 3, 8, 2, 10, 4, 5, 6)

781. செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு.

782. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

783. நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

784. நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

785. புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
னட்பாங் கிழமை தரும்.

786. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.

787. அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு.

788. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு.

789. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
யொல்லும்வா யூன்று நிலை.

790. இனைய ரிவரெமக் கின்னம்யா மென்ற
புனையினும் புல்லென்னு நட்பு.

## LXXX. TO SCRUTINIZE FRIENDSHIP

(M.A. 1, 10, 2, 3, 4, 9, 6, 7, 8, 5)

791. There is no harm in making friendship without previous scrunity. When one has tried and recognised or accepted another as a friend, friendship with him must be lasting or enduring and be unbroken.

792. The friendship of a man untested and unscrutinized will give mortal pain to the friend till he breathes his last.

793. Know the temper, descent or birth, faults, if pardonable, and ample good kindred of a man before you form friendship with him.

794. From friendship with a man even by offering or making presents to him who is noble-born and who would feel shame ans shrink from guilt.

795. Seek out the friendship of those who reprove evil, whose words make you shed tears and who are able to show you the right path.

796. The rod that measures out true friendship or kinship, is there anything but the time of one's distress?

797. To eschew the friendship of fools is real gain to a man (as sages say).

798. Think not the thoughts that dwarf or depress the heart. Don't make friendship who those who will cut off from or desert you in times of distress.

799. The friendship of those who will desert you in times of disater, will, when you think of it, burn your heart or make you feel languish even at the moment of death.

800.

---

792. Oftquoted.

796. the test of the friendship is crisis or sore need.

## 80. நட்பாராய்தல்

(குறள் 1, 10, 2, 3, 4, 9, 6, 7, 8, 5)

791. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.

792. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்.

793. குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
வினனு மறிந்தியாக்க நட்பு.

794. குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு.

795. அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

796. கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்.

797. ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

798. உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.

799. கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை
யுள்ளினு முள்ளஞ் சுடும்.

800. மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்து
மொருவுக வொப்பிலார் நட்பு.

## LXXXI. FAMILIARITY (INTIMACY)

(M.A. 1, 2, 4, 3, 7, 8, 6, 5, 9, 10)

801. What is called Intimacy is friendship which puts no restraint on the freedom of old familiarity.

802. The distinguishing feature of friendship is familiar freedom. The duty of the wise or worthy men is to smack or relish the flavour.

803. What avails old friendship in case no freedom is allowed to its acts?

804. If friends do a thing unbidden out of old familiarity, to take the action in good part becomes intimacy.

805. When friends do an evil thing, it must be viewed as due to not only mere igonarce but out of great familiarity.

806. Even in case of damage, they who are within bounds or know the delicacy of friendship will not desert their intimate association with familiar friends.

807. Even though real injury be done by intimates, sincere friends do not cease to love them for it.

808. Those who are strong in their intimacy will not give their ear to imputations against their friends, and the day of offence will be treated as a day of grace.

809. The world will commend the unbroken friendship of old and faithful friends.

810. Even enemies will esteem, those who do not part from old friends out of their usual kind regard.

---

801. defines intimacy.

808. To pass over the wrong done by friends without resentment is a test of deep love.

## 81. பழைமை

(குறள் 1, 2, 4, 3, 7, 8, 6, 5, 9, 10)

801. பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

802. நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன்.

803. பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை.

804. விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின்.

805. பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின்.

806. எல்லைக் கணின்றார் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்க ணின்றார் தொடர்பு.

807. அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

808. கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்க நட்டார் செயின்.

809. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு.

810. விழையார் விழையப் படுப பழையார்கட்
பண்பிற் றலைப்பிரியா தார்.

## LXXXII. EVIL FRIENDSHIP

(M.A. 4, 9, 10, 1, 2, 3, 5, 6, 8, 7)

he friendship of evil men devouring or quaff-ıg ostensibly, had better grow less than more.

Vhat though you gain or lose the friendship of he unenvious who desert you in difficulty and .ug you in prosperity?

'riendship which weighs carefully what accrues rom it, those who grasp eagerly whatever can be grasped and plunderers - all these are alike or equals.

Better to dwell along than be friends with men who behave badly as the unbroken horse which drops the warrior down in the thick of the war and bolts away.

It is better not to acquire than gain the profitless friendship of men of little minds who forsake trusted friends in hard times or whose help fails in the hour of dire need.

The enmity of the wise man is a crore of times better than the intimacy of the fool.

Better or more profitable by tenfold crores is the hate of enemies than the friendship of seeming or flattering friends.

Silently drop the friendship of those who labour to thwart what they can do on your behalf.

The association of those who say one thing and do another is certainly injurious even in the dream state.

The companionship of those who are friends at home and who disparage you in the court or assembly deserves to be forfeited at any cost.

---

817 Friends are of diverse kinds: face-flatterers, backbiters, parasites, hangers - on and trencher friends and all these deserve condemnations.

820 Thwarters, humbugs and disparagers are worse.

# 82. தீ நட்பு

(குறள் 4, 9, 10, 1, 2, 3, 5, 6, 8, 7)

811. பழகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது.

812. உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென்.

813. உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வரு நேர்.

814. அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்
தமரிற் றனிமை தலை.

815. செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
யெய்தலி னெய்தாமை நன்று.

816. பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா
ரேதின்மை கோடி யுறும்.

817. நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும்.

818. ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்.

819. கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

820. எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு.

## LXXXIII. FALSE FRIENDSHIP

(M.A. 8, 1, 4, 2, 3, 5, 6, 7, 9, 10)

821. The friendship of those who are not but who pretend to be friendly towards you serves like the anvil to hammer you when a suitable opportunity offers itself.

822. The friendship of those who are not but who seem to be kinsmen will change or be fickle-hearted ast he heart of womankind.

823. It is hard for the ignoble to become good-hearted, no matter how well-educated they be.

824. They are to be dreaded as dissemblers who have smiles on their face but whose hearts are bitter.

825. Those whose hearts are not with you or in your favour can hardly be turned towards you by any amount of words you speak to them.

826. The words of those who speak goodly to you like true friends can be soon detected to be the words of foes.

827. Take not the humble words of your enemies as words of submission. Note that the bent how is ever ready to smite you or is aimed only to do you harm.

828. Weapons may be hidden within the worshipping hands. The tears shed by foes are like unto them or likewise.

829. Those who eulogise outwardly but really despise you may justly be flattered and made to smile and slain in the guise of friendship.

830. When the critical time arrives for your foes to show themselves as your friends, take care that you too smile like them and avoid being friendly at heart.

---

822. 'Frailty, the name is woman'. Woman's fickleness is proverbial.

829. 'Too much praise is scandal in disguise'.

830. Measure for measure. Do likewise Take care that apparent friendship is not true friendship.

## 83. கூடாநட்பு

(குறள் 8, 1, 4, 2, 3, 5, 6, 7, 9, 10)

821. சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

822. இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.

823. பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதன் மாணார்க் கரிது.

824. முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும்.

825. மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று.

826. நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ
லொல்லை யுணரப் படும்.

827. சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கந்
தீங்கு குறித்தமை யான்.

828. தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னா
ரழுதகண் ணீரு மனைத்து

829. மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று.

830. பகைநட்பாங் காலம் வருங்கான் முகநட்
பகநட் பொரீஇ விடல்.

## LXXXIV. FOLLY

(M.A. 1, 2, 4, 3, 5, 6, 7, 10, 8, 9)

831. What is that thing which bears the name of Folly? It is to throw away gain and to hold fast to loss.

832. The folly of follies is to desire to do what will prove *infra dig* to you.

833. The parts of folly are shamelessness, unsearching ness, lovelessness, cherish-nothingness.

834. The fool of fools is he who studies scriptures and masters them, wh expounds them, but who does not obey or act them out or has no self-control.

835. The fool who does a thing in his single life and merits hell will sink in the bog which he enters of sevenfold birth.

836. The green fool who does not know how to execute what he undertakes to do, not only fails in it but will wear fetters or be entangled in it.

837. When the fool amasses wealth, he will feed foes to fatten but will let his kith and kin go and starve out.

838. When the fool has got in his hand large hoards, he will act like the madman raving in his tipsiness.

839. The friendship of fools is every delectable or delightful. For, parting with them will leave no pang behind, or there will be no wrench of separation.

840. For the fool to get into the society of fully learned men or sages is like the act of a man who places on his couch his feet unwashed.

---

837, 840 Oft-quoted

838. The mad freaks of one drunk with wealth.

839. Note the innuendo

836. Compare "O What a tangled web we weave when first we practise to deceive" (Scot).

# 84. பேதைமை

(குறள் 1, 2, 4, 3, 5, 6, 7, 10, 8, 9)

831. பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல்.

832. பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்.

833. நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.

834. ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்.

835. ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்
தான்புக் கழுந்து மளறு.

836. பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்.

837. ஏதிலா ரார்த் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை.

838. மைய லொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின்.

839. பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்.

840. கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்.

## LXXXV. STUPIDS SELF-CONCEIT OR DOLTISHNESS

(M.A. 8, 7, 1, 2, 5, 9, 6, 4, 3)

841. Want of knowledge or ignorance is the greatest want or poverty. The world will not hold any other want as want at all in the light of this.

842. The dower of the ignoramus, however cordial is nothing but the fruit of the receiver's penance.

843. It is hard for even the malicious foe to inflict the pain that an ignoramous brings down on his own head.

844. If it be asked what is stupidity or blankness or emptiness of mind, it is the pride of self-conceit or over-estimate of oneself or the affectation of `we are bright or wise'.

845. To act upon ignorance or upo what one has not mastered will throw suspicion on what one has thoroughly made his own.

846. It is ignorance or stupidity that conceals one's blankness or emptiness but does not cover his own faults or reveals them.

847. The Great Secret will go out or the Great Scriptural Truth will fail and the ignoramus will inflict misery on himself.

848. He will not do as advised. He will not seek wisdom himself. He will be disease unto himself till death him parts.

849. He will not see what another man points out, nor will he see it himself. The ignoramus will be blind in his own way with what he thinks he knows.

850. He will deny what the world affirms or asserts. He will be pointed to by the world or by all over the earth as a demon in human form.

---

841. Ignorance is the worst poverty. 'Where ignorance is bliss, it is folly to be wise'.

843. Self-conceit does the greatest harm to self.

850. Oft-quoted.

## 85. புல்லறிவாண்மை

(குறள் 8, 7, 1, 2, 5, 9, 6, 4, 3)

841. அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
யின்மையா வையா துலகு.

842. அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது
மில்லை பெறுவான் றவம்.

843. அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது.

844. வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு.

845. கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும்.

846. அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையா வழி.

847. அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

848. ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்.

849. காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு.

850. உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.

## LXXXVI. HOSTILITY

(M.A. 1, 10, 8, 9, 3, 5, 7, 4, 2, 6)

851. Hostility or the spirit of defiance is that evil quality which brings on every living being the great disease of division or disunion.

852. Though disunion be intended and spite be shown in action, it is best to do injury out of the spirit of defiance.

853. If hostility, that dire disease, be shunned, it will yield a man endless everlasting fame.

854. When hostility, the woe of woes, ceases to exist, it will yield the pleasure of pleasures.

855. Who will be inclined to conquer or overcome the person who can expel the defiant spirit from his mind?

856. The life of him who says that the spirit of hostility in excess is sweet, will soon come to trouble and ruin.

857. Those who do not see the very truth accruing from greatness are men of harmful talents which breed malice or division of hearts.

858. The death of hostility is prosperity. Where the defiant spirit is strong and overpowering, it brings ruin in triumph and sway.

859. He who, in times of prosperity, finds no spirit of disunion at work, cherishes hostility which brings ruin.

860. All evils spring from hostility, but good-will engenders the great wealth of kindliness or cheerfulness.

---

851 853 Hostility is spoken of as a great or grievous disease.

# 86. இகல்

(குறள் 1, 10, 8, 9, 3, 5, 7, 4, 2, 6)

851. இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கும் நோய்.

852. பகல்கருதிப் பற்றா செயினு மிகல்கருதி
யின்னாசெய் யாமை தலை.

853. இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும்.

854. இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

855. இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர்.

856. இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.

857. மிகன்மேவன் மெய்ப்பொருள் காணா ரிகன்மேவ
லின்னா வறிவி னவர்.

858. இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு.

859. இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு.

860. இகலானா மின்னாத வெல்லா நகலானாம்
நன்னய மென்னுஞ் செருக்கு.

## LXXXVII. THE GLORY OF ENMITY

(M.A. 1, 7, 9, 8, 10, 4, 5, 6, 3, 2)

861. Avoid the encounter with the more powerful. Shun it not with weaker men but go on without respite.

862. No love has he for kinsmen, nor great support has he nor is he, strong himself? How can such a man withstand the enemy's strong forces?

863. He is a craven, he knows nothing, he agrees with none, he is a miser. Such an one will fall an easy prey to enmity.

864. He does not turn away from wrath, he is a babbler of secrets. Such an one is an easy prey to every foe in every place.

865. He sees not the right path, does not do the fitting thing, cares not for crimes (vices), is gracious. Such an one is a foeman's easy prey (pleasure).

866. He is blind in his rage and very lecherous (addicted to lust). Such an one's enmity will be sought with pleasure and ease.

867. Be sure to pay anything and buy the enmity of the man who undertakes a thing and does unseemly (ungracious) acts.

868. If he has no virtues and many vices to his credit, none will claim kinship with him, and his foes will be gladdened at heart.

869. Those who have the luck to encounter ignorant (stupid) and timid foes, will certainly have exceedingly great joy.

870. Fame will never attend a man who has not gained the least object (victory) by contending against the illiterate foe.

---

862. The characteristics of foes who fall an easy prey.
870. No glory to the weak and apathetic who will not budge an inch against the least foe.

## 87. பகைமாட்சி

(குறள் 1, 7, 9, 8, 10, 4, 5, 6, 3, 2)

861. வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை.

862. அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு.

863. அஞ்சு மறியா னமைவில னீகலான்
றஞ்ச மெளியன் பகைக்கு.

864. நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது.

865. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது.

866. காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும்.

867. கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து
மாணாத செய்வான் பகை.

868. குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினனிலனா மேமாப் புடைத்து.

869. செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
வஞ்சும் பகைவர்ப் பெறின்.

870. கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று
மொல்லானை யொல்லா தொளி.

## LXXXVIII. TO APPRAISE ENEMIES' POWER

(M.A. 2, 3, 5, 7, 4, 6, 8, 10, 9, 1)

871. That ill-natured thing called enmity should not be desired even in jest.

872. Though the enmity of men who plough with bows be incurred, do not incur the hate of those who plough with words.

873. He who is alone and incurs the enmity of many foes is more ignorant than the self-conceited and proud.

874. The world rests on the merit of the tactful man who makes friends of his foes.

875. He who has no allies but has to meet two foes must make friends with one of them.

876. Whether you have chosen men of fact or not, in times of great crisis, don't show your lack of trust in them but let them alone.

877. Don't disclose thy woes to those who are unaware of them, and don't tell your weakness to your open enemies.

878. Know the way, do your part, and make self-defence. If you do so, the pride of your foeman will be down in the dust.

879. Fell down thorny trees when they are young and tender. When they grow and become hard, or mature, they will prick and pierce the hands that cut them down.

880. They who fail to put down the pride of their foeman do merely breathe in and out and cease to exist.

---

872. Oft-quoted. Compare: 'The pen is mightier than the sword'.

879. Oft-quoted. Compare: A stitch in time saves nine. Delays are dangerous. Note the parable as in couplets 475, 476 in chapter 48.

## 88. பகைத்திறந் தெரிதல்

(குறள் 2, 3, 5, 7, 4, 6, 8, 10, 9, 1)

871. பகையென்னும் பண்பி லதனை யொருவ
நகையேயும் வேண்டற்பாற் றன்று.

872. வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.

873. ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

874. பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு.

875. தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ
னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று.

876. தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல்.

877. நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து.

878. வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு.

879. இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து.

880. உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்.

## LXXXIX. INTERNAL OR INSIDIOUS ENMITY

(M.A. 4, 1, 2, 8, 9, 10, 6, 5, 3 7)

881. Water and shade, if not wholesome, will prove injurious. If friends are not friendly but are traitiors in the camp, their insidiousness will be baneful.

882. Dread not your foes who are like swords, but dread the foes who profess themselves to be your kinsmen.

883. Guard yourself against internal enmity. In times of peril, it will inflict on you a deeper wound than the potter's knife in making pots.

884. If enmity within that will prevent the mind discloses itself, it will do you greater evil (or many an evil) than even unkind kinship

885. If enmity lurks in secret in kindred, it will cause more grievous hurt and do you to death.

886. If discord arises among those who are in concord with you, it is hard to avert the catastrophe to you.

887. Though united closely like the casket and its lid. the family with internal enmity can never fare well together.

888. Where the house is divided against itself, its strength will go down, just as the file wears away gold when it is polished with it.

889. Though small as the tills, or sesamum's split seed the hidden enmity be, it will work sure destruction.

890. Living with one not in concord is like dwelling in a hut with a cobra as companion.

---

887, 890. Oft-quoted

889. The tiny sesamum (tilam) seed split up.

887, 890. The idea of insidiousness is illustrated with apt similes.

883. Not the potter-simile.

## 89. உட்பகை

(குறள் 4, 1, 2, 8, 9, 10, 6, 5, 3, 7)

881. நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு
மின்னாவா மின்னா செயின்.

882. வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போற் பகைவர் தொடர்பு.

883. உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.

884. மனமாணா வுட்பகை தோன்றி னினமாணா
வேதம் பலவுந் தரும்.

885. உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா
னேதம் பலவுந் தரும்.

886. ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
பொன்றாமை யொன்ற லரிது.

887. செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
யுட்பகை யுற்ற குடி.

888. அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி.

889. எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு.

890. உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று.

## XC. NOT TO OFFEND THE GREAT

(M.A. 10, 2, 1, 3, 5, 6, 4, 9, 8, 7)

891. Not to slight any is the work of the powerful. It is greatest among the acts of those who safeguard themselves.

892. If the great ones be not respected, such disrespect will work irretrievable peril to the offenders.

893. If you seek ruin, slight the counsel of the great ones. Provoke the powerful if you long to assure you ruin when they please.

894. If men of no power wreak evil to men of power. thier action is of a piece with the beckoning with the hand of Yama, the god of death.

895. They who slight the angry frown of mighty monarchs, though they be alive, will be counted as dead, or will not thrive wherever they roam.

896. They who caught in flames may survive the conflagration. They who offend the great ones will have no escape.

897. What can grandeur of life and immensity of wealth do if wrong be done to sages blest with many a virtue.

898. If the great suffer diminution in estimation, the offenders, however unshaken thier household, will be off the earth.

899. If men of high principles be incensed, even kings will lose thier sceptre and crown and be lost in flames.

900. Though possessed of exceedingly great support, they will be lost if great men lf lofty fame and virtue be wroth or incensed.

---

892. Oft-quoted

894, 896 Note the comparisons.

899, 900 Even sovereignity is no exception to the rule that offenders of the great ones will be visited with condign punishments.

# 90. பெரியாரைப் பிழையாமை

(குறள் 10, 2, 1, 3, 5, 6, 4, 9, 8, 7)

891. ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை.

892. பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற்
பேரா விடும்பை தரும்.

893. கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டி
னாற்று பவர்க ணிழுக்கு.

894. கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
காற்றாதா ரின்னா செயல்.

895. யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர்.

896. எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

897. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னாந்
தகைமாண்ட தக்கார் செறின்.

898. குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து.

899. ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.

900. இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின்.

## XCI. TO BE LED BY WIVES

(M.Aa. 8, 9, 4, 3, 2, 1, 5, 6, 7, 10)

901. T`ose who have intense desire for or dote upon their wives seldom attain to greatness. Those who have the ambition to do great things disdain lust.

902. This prosperity of the man who has no self-respect and who is infatuated with his wife will bring on him great shame.

903. He who is by nature submissive to his wife will always bring on him shame among the good.

904. The noble action done by a wife-fearing man who does not deserve the other world will never be glorious.

905. He who trembles before is wife will never do any good to worthy men.

906. Those who fear the housewife's tender arm will never gain dignity though they live happily like gods.

907. The modest or shamefaced woman herself is more dignified than the manliness of him who obeys his wife or who is led by the nose by her.

908. Those who exactly fulfil the wishes of their wives with beauteous brows will not help their friends in need, not will they do good to any.

909. In those who submit to petticoat government cannot be seen any charitable action, well-meaning wealth and joyous life.

910. The folly of having excessive connubial love will never find place in cultured minds set on doing great things.

---

Husbands are either doting and infatuated, cowardly and submissive and these never attain fame or distiction, nor do any good to any here or otherwhere.

# 91. பெண்வழிச் சேறல்

(குறள் 8, 9, 4, 3, 2, 1, 5, 6, 7, 10)

901. மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளு மது.

902. பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்.

903. இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று
நல்லாரு ணாணுத் தரும்.

904. மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று.

905. இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று
நல்லார்க்கு நல்ல செயல்.

906. இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர்.

907. பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து.

908. நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர்.

909. அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில்.

910. எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில்.

## XCII. PROFLIGATES (PROSTITUTES)

(M.A. 2, 1, 3, 4, 5, 6, 8, 7, 9, 10)

911. Choice braclet or bangle wearers are amorous, not for love but for gold, and their sweet or honeyed words will prove ruin.

912. Evil woman (prostitutes) weigh the lucre or profit and speak kind words. Abandon them weighing thier worth.

913. The false embrace of mercenary women is like embracing some unknown corpse in a dark room.

914. Wise men who seek the wealth of grace will keep themselves away from the worthless charms of harlots whose only aim is making wealth.

915. Men who are very intelligent and wise will abstain from the fond embraces of common whores.

916. Men who would keep up their own worth will turn away from women who would make a display of their artful charms and whose charms are free and common to all.

917. Shallow-minded or light-hearted or impure and unchaste men will seek the society of women who will embrace the body but whose thoughts will be other where.

918. The false embrace of wily women will be resorted to by men devoid of searching wisdom.

919. The soft arms of the well-bedecked whores make the hell which engulfs abject or contemptible tomfools.

920. Women of divided (two) minds, toddy-drink, and the gaming-table (dice)-these are the pursuits of men destined to misfortune.

---

Profligates, prostitutes, harlots, whores, bawds or lewd women care for gain and bring rain on the happy-go-lucky, improvident, low-minded, tonsuring fools.

913. Oft-quoted. 918. luring siren or demoness.

## 92. வரைவின் மகளிர்

(குறள் 2, 1, 3, 4, 5, 6, 8, 7, 9, 10)

911. அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா
ரின்சொ லிழுக்குத் தரும்.

912. பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல்.

913. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று.

914. பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
ளாயு மறிவி னவர்.

915. பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர்.

916. தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்.

917. நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்.

918. ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

919. வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு.

920. இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

## XCIII. ABSTAINING FROM TODDY-DRINK

(M.A. 4, 1, 2, 3, 10, 5, 8, 9, 7, 6)

921. Men addicted to drinking toddy every day will not be feared by thier foeman and they will lose the glory already achieved.

922. Don't drink intoxicating toddy. If you desire it, you will not be counted as a man of esteem by all good or saintly men.

923. Toddy-drinking is hated even by the mother, How would it appear to the truly wise?

924. The fair maid, called shame, will turn her back on topers or addicted toddy-drinkers whom all condemn.

925. To but the loss of self-consciousness (forgetfulness) by drinking intoxicants is most stultifying.

926. Unconscious sleepers are none other than the dead. Always toddy drinkers are poison-takers.

927. Who take to drink and get tipsy will be held in contempt by the men of the locality when they find it out.

928. Give up professing ignorance of drunkeness, what is hidden in the mind or held as secret will soon come out and become public.

929. He who would argue out the drunken habit is like him who tries to find out with a lamp in hand one who is immersed in great depths.

930. When a man in his sober moments sees a staggering drunkard, will he not reflect on his own folly in the fit of his revelry?

---

923, 926. Oft-quoted

928. Hidden facts will out in the drunken state

929. A toper cannot be converted into a sober man by hard reasoning or argumentation with him. Addiction is condemned, but not toddy-drinking. Soma-juice quaffing is a sacrifical rite according ot the Vedas.

# 93. கள்ளுண்ணாமை

(குறள் 4, 1, 2, 3, 10, 5, 8, 9, 7, 6)

921. உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார்.

922. உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
னெண்ணப் படவேண்டா தார்.

923. ஈன்றாண் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.

924. நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு.

925. கையறியாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்.

926. துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

927. உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங்
கள்ளொற்றிக் கண்சாய் பவர்.

928. களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும்.

929. களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

930. கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு.

## XCIV. GAMBLING

(M.A. 1, 7, 4, 9, 10, 2, 5, 6, 3, 8)

931. Desire not playing with dice though you should win. Your gain is as the baited iorn-hook which the fish swallows.

932. To the gamblers who win once but lose a hundred times, will there be a way to obtain good and live in prosperity?

933. If a gambler always talks of nothing but playing with dice, all his wealth and income will surely pass into the hands of others.

934. Nothing reduces a man to utter indigence more than gambling, which works many an evil to friends and destroys his own name and fame.

935. Men who take pride in gambling, gambling-hall, and gambling-art out of lust for gain come to grief (nought).

936. Men wearing the veil of the gambling goddess of Misfortune suffer great distress thereby and have sore sorrows therefrom.

937. If entry be made early in the gambling hall, it will undo hereditary wealth and good name.

938. Gambling undoes wealth, bends the soul to utter falsehood, destroys grace and brings misery.

939. Dress, wealth, food, praise and learning-all these five will leave the gambler intent on gambling.

940. Every time the gambler loses, his heart will be ever more in the play. So does the soul which is often times afflicted to live long on earth.

---

The different words used for gambling; soothu (931-4-68-940), Kalaham (937), Urul-aiyam, ayam (933,939). Among the chief Aryan vices denounced in modern poetry are drinking, gambling and prostitution. The Rig veda used the word Gambler synonymous with cheat and rogue. Vide the Gambler's Lament (X. 34) Tiruvalluvar has devoted a separate chapter to the evils of each of those vices.

# 94. சூது

(குறள் 1, 7, 4, 9, 10, 2, 5, 6, 3, 8)

931. வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.

932. ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ
னன்றெய்தி வாழ்வதோ ராறு.

933. உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்.

934. சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்.

935. கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார்.

936. அகடாரா ரல்ல லுழப்பர் சூதென்னு
முகடியான் மூடப்பட் டார்.

937. பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின்.

938. பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது.

939. உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின்.

940. இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர்.

## XCV. MEDICINE

(M.A. 6, 1, 2, 3, 4, 5, 10, 7, 8, 9)

941. Excess or deficit of any action which produces more or less of the three humours beginning with wind, is reckoned by the authors of medial science to cause disease.

942. There will be no need of medicine to your body if you eat again after seeing carefully that the food already eaten has been fully digested.

943. When fully digested, eat in measure, and it will lead to long life (make one who has taken body know the way to prolong it).

944. Know that the food you have taken is fully digested, and that you are really hungry; and choose what will agree with your body and take care that you do not eat any food that will not suit your body.

945. If you eat the agreeable food again, denying the disagreeable, your life will suffer no hardship.

946. As a man who has bowel-clearnce experiences ease and pleasure, so does a beastly glutton experience disease and pain.

947. If a man knows not what fire there is in his stomach (what the power of his digestion is) and eats much, he will be afflicted with disease beyond measure.

948. It is good for the physician to diagnose the disease, trace its cause, and how it may be moderated, and then to use his expert skill.

949. Let the learned doctor study the nature of the constitution of the patient and of the disease he is subject to and what the right time is to tackle it and then let him administer medicine.

950. The patient, the doctor, the medicine, the apothecary, compounder (medical attendant) - on these four depends all cure, and the medical science accordingly falls into four parts.

---

The poet's knowledge of medical science is exhibited here. This chapter has the whole of the medical science in nutshell. 946. lays stress on bowel-clearance as necessary as digestion - (paritthi)

# 95. மருந்து

(குறள் 6, 1, 2, 3, 4, 5, 10, 7, 8, 9)

941. மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று.

942. மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்.

943. அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு.

944. அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

945. மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு.

946. இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்கும்
கழிபே ரிரையான்க ணோய்.

947. தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
னோயள வின்றிப் படும்.

948. நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

949. உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல்.

950. உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து.

# XCVI. NOBLE DESCENT

(M.A. 2, 3, 1, 5, 6, 7, 9, 10, 4, 8)

951. Except in the members of a noble family can never be found both natural rectitude and sense of shame.

952. The members of a good family will never lack rectitude (right conduct), truthful word, and modesty - these three things.

953. The noble family noted for its truthfulness has the following four characteristics - graceful smile, liberal giving, sweet word, courteousness (condescension).

954. Men of good family will never soil their reputation for crores upon crores offered to them.

955. men of ancient family do not discard their wonted liberality when their means of benefaction have gone down.

956. Those who would live in accordance with the traditions of their noble descent never stoop to low deceit nor do ignoble actions.

957. The fault of a member of a noble family will loom large in the public eye as the spot or speck on the face of the bright moon in the sky.

958. A man's noble descent will be doubted if no love be seen to blend with his high repute.

959. The sprouts of plants will show the worth of the soil in which they appear. The men or noble descent are revealed by the words they speak.

960. If good be sought, modesty is a prime requisite. If nobility be sought, humility to all is indispensable.

---

Nobility is true or ancient, and its test are love, humility, civility, generosity, liberality and truthfulness. Its fault will appear larger. It will do nothing mean or degrading.
951, 952, 953. give out the nine traits of true nobility.
954, 957, 959 Oft-quoted.

# 96. குடிமை

(குறள் 2, 3, 1, 5, 6, 7, 9, 10, 4, 8)

951. இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு.

952. ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார்.

953. நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.

954. அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர்.

955. வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று.

956. சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார்.

957. குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.

958. நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும்.

959. நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.

960. நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு.

## XCVII. HONOUR

(M.A. 1, 3, 2, 4, 5, 6, 7, 8, 9, 10)

961. Reject what will lessen your honour, however indispensable th ey be.

962. Those who desire intrepidity with splendour will do no inglorious act though it may add to his wealth.

963. To be humble is desired in the state of opulence. To keep up self-respect is desired inthe state of decline.

964. When men fall from their status, they are like the hairs of the head that have fallen off.

965. Men, mountain high, will sink if they will do a mean acts as small as *abrus* (kunri) seed.

966. It yields no praise, nor does it open the gates of heaven. Why do men folow scorners and be at their beck and call?

967. Better than live as a parasite on scorners is the condition of a man that is doomed once for all.

968. When high status has come to lose honour, is life that keeps the body precious as ambrosia?

969. Men, who are like the yak which loses its life when it is shorn of its (long silky) hair, will forfeit their life when they lose honour.

970. The world will applaud the glory with reverence of those who will give up their life in case of dishonour.

---

964, 969 Oft-quoted. Compare: All is well that ends well. "From lowest place when virtuous things proceed, The place is dignified by the doer's deed:
Where great additions swell, and virtue more.
It is a dropsied honour: good alone
Is good without a name: Vileness is so.
................. Honours best thrive.
When rather from our acts we them derive
Than our fore-goers" (Shakespeare)
968, 969 "Life every man holds dear; but the dear man
Holds honour far more precious-dear than life." (Troilus and Cressida V)

## 97. மானம்

(குறள் 1, 3, 2, 4, 5, 6, 7, 8, 9, 10)

961. இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல்.

962. சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

963. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு.

964. தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை.

965. குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்.

966. புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை.

967. ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுத லன்று.

968. மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து.

969. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின்.

970. இளிவரின் வாழாத மான முடையா
ரொளிதொழு தேத்து முலகு.

## XCVIII. GREATNESS OR GLORY

(M.A. 7, 1, 2, 8, 10, 9, 3, 5, 4, 6)

971. Glory is to a man strength of will. Littleness is for him to say `I will survive' even though it be lost.

972. All lives are alike at birth. Their worth (merit) differs with the difference of their vocations.

973. Men of high birth, but mean-souled, are never great. Men of low birth, but high-souled, are never low.

974. Like chaste women (who are true to their husbands), greatness endures when it respects or is true to itself.

975. Great men will do great deeds when they do anything.

976. It is rarely to be found in little men, the tendency or inclination to be associated with and revere the truly great.

977. If distinction alights on the head of a little man,his action will only be hightly haught or insolent.

978. Greatness is ever humble. Littleness will ever brag and extol self.

979. Greatness is lack of conceit. Littleness will be highly conceited, will drive in a care of great vanity.

980. Greatness will screen the faults of others. Littleness takes pleasure in exposing them.

---

971. Great men are men of resolute purpose.

972, 973, 974. are Oft-quoted.

975 to 980. contrast greatness and meaness.

# 98. பெருமை

(குறள் 7, 1, 2, 8, 10, 9, 3, 5, 4, 6)

971. ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல்.

972. பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.

973. மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்.

974. ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.

975. பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல்.

976. சிறியா ருணர்ச்சியு ளில்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னும் நோக்கு.

977. இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்.

978. பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து.

979. பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்.

980. அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

## XCIX. SAGENESS

(M.A. 6, 4, 3, 2, 5, 7, 8, 1, 9, 10)

981. All good things, say they, are duties to those who are bent upon achieving sagely perfection.

982. Good qualities or great virtues characterise sages or perfect men. All other good is good but in name.

983. Love, modesty obligation, complaisance and truth are the firm pillars of sagely perfection.

984. Non-killing is as good as penance. Not slandering is as good as sageness.

985. The power of the mighty is humility. It is the weapon with which sages convert foes into friends.

986. If it be asked, what is the test of sagely perfection, it is to bear repulse from even meaner men.

987. What is sagely perfection worth if it does not do good to even evil-doers?

988. Poverty is disgrace to none, if one be endowed with the stength of sagely perfection.

989. Those who are called the ocean of sagely perfection will never swerve from the path of rectitude even though the world comes to an end.

990. If men of sagely perfection be lacking in their sageness, it is sure that the great earth will cease to bear its burden.

---

984. True penance is non-killing. A hit of yaga performers.
985. The greatness of sages lies in non-audacity.
988. Poverty is no crime or disgrace to men of perfect worth.
989. The forte of sages is unswervigness from righteous path. Oft-quoted.
990. The negative virtue of sages.

# 99. சான்றாண்மை

(குறள் 6, 4, 3, 2, 5, 7, 8, 1, 9, 10)

981. கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

982. குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ மன்று.

983. அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையொ
டைந்துசால் பூன்றிய தூண்.

984. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

985. ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

986. சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்.

987. இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு.

988. இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

989. ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார்.

990. சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
றாங்காது மன்னோ பொறை.

## C. POSSESSION OF GOOD NATURE

(M.A. 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10)

991. He who is easily accessible to every man will easily know what good nature is.

992. The two familiar elements of Good Nature are love or good-will and high birth.

993. Men are not alike, because all have like parts or limbs. They are alike if they have their inward worth or intrinsic merit in the same measure.

994. The world praises the good nature of those who are humane and who have reaped the fruits of their benefaction.

995. Contempt is evil though in jest. They who know the nature of man will appreciate the good nature even in their foemen.

996. The world wags, because it has persons of good nature in it. If not, it will surely go to ruin or be buried in the dust.

997. Though sharp men be like the file, those who are devoid of good humane nature will be like trees.

998. It is most unbecoming in a man to show no good nature even though men do him no good and do him real harm.

999. To those who are not clever enough to smile or show a cheerful face, the great and vast world will be wrapped in darkness even in the daytime.

1000. The immense wealth acquired by a man of unkind nature is like good milk spoiled, because of its having been kept in an unclean vessel.

---

The word 'panpu' may mean good or sweet nature, polished manner, politeness, courtesy or courteousness. For good, kind or sweet nature is loving and noble. It is what the world praises. May may be learned, very intelligent and sharp; they may be favourites of fortune, mighty and puissant. All these will be of no avail if they are not endowed with good humane nature.

997, 1000 Oft-quoted.

# 100. பண்புடைமை

(குறள் 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10)

991. எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

992. அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

993. உறுப்பொத்தன் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு.

994. நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு.

995. நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

996. பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேன்
மண்புக்கு மாய்வது மன்.

997. அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

998. நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை.

999. நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

1000. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.

## CI. WEALTH WITHOUT BENEFACTION

(M.A. 3,7,2,6,8,10,4,5,1,9)

1001. He who stores up in his house vast and ample wealth and enjoys nothing is dead, as nothing will be the outcome of it.

1002. He who thinks that all will come with wealth and so does not dispense charity has the degraded birth of a doting miser.

1003. Those who hoard up wealth out of their miserliness and do not care for a good name are a burden to the earth though they appear in it.

1004. What does a man whom none loves mean to leave behind as his heir at his death?

1005. Of what avail will be crore upon crore of wealth to misers who neither give nor enjoy them.

1006. The hoard of him who enjoys nothing and who is not disposed to give anything to men of excellence is an unmitigated evil in itself.

1007. The wealth of him who does not all give to the needy is like the fair and charming woman grown old and living in single blessedness.

1008. The wealth of him whom none loves is like the poisonous tree in the midst of a village bearing ample fruits.

1009. The hoards accumulated by those who bear no love for humanity, who stint for themselves and who care no jot for charity will fall into the hand of or be taken by others.

1010. The brief distress of the generous - hearted and liberal-handed will be for a while like the dark rain cloud which grows dry or which is exhausted soon.

---

1001, 3, 5, 8 are Oft-quoted.

1007. A beautiful simile

## 101. நன்றியில் செல்வம்

(குறள் 3, 7, 2, 6, 8, 10, 4, 5, 1, 9)

1001. வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில்.

1002. பொருளானா மெல்லாமென் றீயா திவறு
மருளானா மாணாப் பிறப்பு.

1003. ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை.

1004. எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரா
னச்சப் படாஅ தவன்.

1005. கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.

1006. ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்
றீத லியல்பிலா தான்.

1007. அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
பெற்றா டமியண்மூத் தற்று.

1008. நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
ணச்சு மரம்பழுத் தற்று.

1009. அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
வொண்பொருள் கொள்வார் பிறர்.

1010. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

## CII. COYNESS (MODEST DECORUM)

(M.A. 9,1,2,4,10,8,3,5,6,7)

1011. The shame felt by a man who blushes for an unbecoming action is different from the coyness of the fair bright-browed and virtuous maiden.

1012. All living beings need alike food, clothes and other things. The excellence of men is indicated by their sense of shame (modesty).

1013. All souls claim the fleshly bodies as their own. Perfect virtue ever dwells with the sense of shame.

1014. Is not the sense of shame an ornament to sages? If not, the strut of proud men will be deplorable to the sight.

1015. The world is the seat of virtuous shame to those who feel ashamed for the faults of others as for their own.

1016. High souls do not care for the charms of the world if the hedge of shame does not remain inviolate.

1017. Men will sacrifice their lives for shame, but they do not sacrifice their sense of shame for saving theirlives.

1018. If a man does not feel ashamed of what other's dread as acts of shame, virtue will be ashamed of him.

1019. The neglect of duty will degrade one's race. If shamelessness prevails, it will consume every good.

1020. The movement of the shameless at heart is like that of the wooden puppet due to the pulling of the strings attached to it for doing the functions of life.

---

There are two sorts of modesty - womanly and manly.

1017. Oft-quoted for the contrasted sentiment.

1020. Shameless men are lie wooden puppets, for both do the functions of life alike.

## 102. நாணுடைமை

(குறள் 9, 1, 2, 4, 10, 8, 3, 5, 6, 7)

1011. கருமத்தா னாணுத னாணுத் திருநுத
நல்லவர் நாணுப் பிற.

1012. ஊணுடை யெச்ச முயிர்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு.

1013. ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணென்னு
நன்மை குறித்தது சால்பு.

1014. அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்க ஃதின்றேற்
பிணியன்றோ பீடு நடை.

1015. பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு.

1016. நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.

1017. நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டால்
நாண்டுறவார் நாணாள் பவர்.

1018. பிறர்நாணத் தக்கது தானாணா னாயி
னறநாணத் தக்க துடைத்து.

1019. குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடும்
நாணின்மை நின்றக் கடை.

1020. நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று.

## CIII. HOW TO IMPROVE THE FAMILY

(M.A. 4,3,8,7,9,1,2,6,5,10)

1021. No greatness is more dignified than that of him who says `I will not be slack in doing my work'.

1022. The family progresses when a member of it puts forth manly effort combined with fulness of knowledge, when these two operate together unflinchingly.

1023. When a man comes forward and says `I will improve the condition of my family', Divinity girds up its loins and shown him the way.

1024. By those who will raise the status of the family with unremitting labour, their end can be achieved without a thought over it.

1025. The world will cling to and claim kindship with him who leads an unblemished life and is bent upon advancing his family.

1026. It is good manhood for a man to raise the status of the family to which he has owed his birth.

1027. Just as the fearless hero bears the brunt of the fight in the field of battle, so the burden of raising the family-status falls on the shoulders of its strongest member.

1028. To them who would keep up their family, there is no season. If they will rust or stand upon their dignity, it will be doomed.

1029. Truly, the body of the man who would screen his family from every evil that might afflict it will be the fit receptacle for various toils and sorrows.

1030. The family that has no good man to support it will have a fall when trouble shakes it to its foundation.

---

1023, 1025, 1028 are Oft-quoted.

1029. The author sympathises with the man who bears the burden of all trials and hardships for the sake of advancing his family.

1030. A good man is the pillar of his family. When the pillar is shaken, the family will perish. The trunk of the family tree is cut off by the felling axe of trouble.

## 103. குடிசெயல் வகை

(குறள் 4, 3, 8, 7, 9, 1, 2, 6, 5, 10)

1021. கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில்.

1022. ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டி
னீள்வினையா னீளுங் குடி.

1023. குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்.

1024. சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு.

1025. குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு.

1026. நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல்.

1027. அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை.

1028. குடிசெய்வார்க் கில்லை பருவ மடிசெய்து
மானங் கருதக் கெடும்.

1029. இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்ற மறைப்பா னுடம்பு.

1030. இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்றும்
நல்லா ளிலாத குடி.

## CIV. AGRICULTURE (HUSBANDRY)

(M.A. 1, 9, 7, 8, 5, 6, 2, 3, 4, 10)

1031. Whirl as the world will, it must after all rely on tillage or on the plough. Therefore agriculture or the cultivation of the soil is the noblest of all industries.

1032. The tillers are the linch-pin of the world. They support all those who, being unable to do husbandry or unequal to the task, turn to other arts and crafts as their avocations.

1033. They alone live who eat food by tilling the ground. The rest are hangers - on, eating what thier masters (employers) give.

1034. Those who have the shadow of the rich ears of corn will find the shadow of many a king's umbrella under thier own shadow or under the shadow of thier own monarch.

1035. They will not beg, they will not hide but give to those that beg, who live on the fruits of their own tillage.

1036. If tillers remain at home with folded hands. ascetics (those who renounce what all the world longs for) will be nowhere.

1037. If the soil be so dried in the sun's heat that one measure of dust be reduced to a quarter of it, it will not need even a handful of cowdung manure but will yield plenty.

1038. To spread cowdung manure is better than to plough. After weeding out, it is better to guard it than to water it.

1039. If the owner of the field stays at home without inspecting it, it will sulk like the wife in her angry mood.

1040. The earth, called the kindly dame, will laugh when she sees men sitting idly at home and deploring their poverty.

---

This chapter, like the one on Medicine, deserves careful study as a manual of instructions to the agriculturist as the latter to the patient and the doctor.

1037, 1038. Embody valuable suggestions to the farmer.

1033, 103. Oft-quoted. 1039. The simile is implied.

1040. Mother Earth will laugh at idlers.

## 104. உழவு

(குறள் 1, 9, 7, 8, 5, 6, 2, 3, 4, 10)

1031. சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா
லுழந்து முழவே தலை.

1032. உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா
தெழுவாரை யெல்லாம் பொறுத்து.

1033. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்.

1034. பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர்.

1035. இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.

1036. உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை.

1037. தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்.

1038. ஏரினு நன்றா லெருவிடுதல் நட்டபி
னீரினு நன்றதன் காப்பு.

1039. செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
தில்லாளி னூடி விடும்.

1040. இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும்.

## CV. POVERTY (INDIGENCE)

(M.A. 1, 2, 3, 8, 5, 4, 10, 7, 6, 9)

1041. If it be asked what is more painful (galling) than poverty, the only answer is that nothing but poverty is more painful.

1042. The savage sinner. called Poverty, make the advent and kills the pleasure of a man in this as well as in the next world.

1043. Excessive desire, styled Indigence, will destroy both ancient descent and beauty (of fame) together.

1044. Even in the case of men of good family, poverty will make them utter vile words that will be unbecoming to them.

1045. Poverty, otherwise named clamity, will include a host of sorrows or morifications.

1046. Though the poor man's words convey great wisdom based on good experience, they will carry no weight with the world.

1047. Indigence, unmixed with virtue, will make the mother look at her son as a stranger to her.

1048. Is Indigenee to bear me company to-day? It did kill me, as it were, yesterday.

1049. One can sleep in the heart of flames, but in the midst of poverty, the eye will have no wink of sleep at all.

1050. Not to renounce their lives altogether by those who have no food to eat is to cause the wastage of other men's salt and gruel.

---

1045. It is a Pandora's box.

1049. Death is preferable to utter indigence, for the latter consumes the means or resources of others which may be utilized for the good of others.

## 105. நல்குரவு

(குறள் 1, 2, 3, 8, 5, 4, 10, 7, 6, 9)

1041. இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா தது.

1042. இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும்.

1043. தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை.

1044. இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்.

1045. நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.

1046. நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.

1047. அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

1048. இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு.

1049. நெருப்பினுட் டுஞ்சலு மாகும் நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது.

1050. துப்புர வில்லார் துவரத் துறவாமை
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று.

## CVI. BEGGING

(M.A. 1, 3, 7, 6, 9, 8, 5, 4, 2, 10)

1051. Beg of men who can afford to be charitable when you come across them. If they feign inability, the fault is theirs, not yours.

1052. It is a pleasure for one to beg if what is asked for comes without annoyance or huffing.

1053. To Beg of those who know the duty of dispensing charity without pleading want or inability on their part has a charm indeed.

1054. Begging is like bestowing (giving) if men who never dream of denial be approached.

1055. Begging in person is resorted to , because the world has men who will say nay to mendicants.

1056. The curst of poverty will wholly cease to exist if men who will feign the plague of inability to help the beggar disappear from the world.

1057. If givers be seen who give without snubbing or using insulting words, mendicants' hearts will overflow with joy.

1058. If the generous world had no beggars, the earth will be a happy scene for only wooden puppets to come and go.

1059. If there be non playing the role of mendicants, what pleasure or pride on earth can there be for the generous-hearted givers?

1060. The beggar must on no account get wroth. His own plaguing poverty will bear ample witness to existence of others in a like situation.

---

1060. A piece of sound advice and admonition to proud or haughty beggars prowling about in the world.

# 106. இரவு

(குறள் 1, 3, 7, 6, 9, 8, 5, 4, 2, 10)

1051. இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பி
னவர்பழி தம்பழி யன்று.

1052. இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின்.

1053. கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎ ருடைத்து.

1054. இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு.

1055. கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது.

1056. கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும்.

1057. இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
முள்ளு ளுவப்ப துடைத்து.

1058. இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று.

1059. ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோண்
மேவா ரிலாஅக் கடை.

1060. இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி.

## CVII. THE DREAD OF BEGGARY

(M.A. 7, 8, 3, 10, 9, 2, 1, 4, 5, 6)

1061. Not to beg evn of those eye-like men who gladly give without feigning inability is a greater or crore of gain.

1062. If the Maker of the world ever intended that men should live a begging, may He likewise go to pot and make haste to lose life!

1063. Nothing is harder than the hardihood that says to itself, `we will wipe away indigence by begging.'

1064. The whold word will hardly suffice for the worthy soul in deep distress which will not stoop to beg.

1065. Though it is only thin gruel as clear as the crystal water, nothing is sweeter than the food earned by one's own toil.

1066. Even if what is asked for be water for the cow, nothing is so degrading to the tonue as to utter a begging prayer.

1067. I beg onething of all beggars. If at all you beg, I pray, don't beg of those who conceal their wealth.

1068. The ill-rigged float, called begging, when it dashes itself on the hard darth or rock of feigned inability, will go to wrack and ruin.

1069. The heart melts at the thought of the lot of the beggar, but it perishes wholly, at the thought of the stern repulse or rebuff it receives.

1070. Where will the spirit of the denier of help take refuge when the life of the beggar passes away even as he begs?

---

1062. A curse on God if he creates beggars. Oft-quoted.

1066. Oft-quoted. It reflects the author's own sentiment on the subject.

1068. The simile of the ill-rigged float is happy.

# 107. இரவச்சம்

(குறள் 7, 8, 3, 10, 9, 2, 1, 4, 5, 6)

1061 கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணு
மிரவாமை கோடி யுறும்.

1062. இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்.

1063. இன்மையிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில்.

1064. இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு.

1065. தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில்.

1066. ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்.

1067. இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று.

1068. இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.

1069. இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
வுள்ளதூஉ மின்றிக் கெடும்.

1070. கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர்.

## CVIII. BASENESS

(M.A. 1, 3, 2, 5, 4, 6, 8, 9, 7, 10)

1071. The base are like men in their shape for form. I have never seen men exactly like them, or their counterpart.

1072. The base are more divine or luckier than the grateful, for their mind is ever free from carking care.

1073. The base are like the gods; for these too do what they please like them, or what they are asked to do.

1074. The base, when they see the dog-like faith or attachment of women, will exult that they surpass the reprobates.

1075. Fear is the only virtue or rule of conduct of the degenerates. It there be any other motive for good conduct, it is strong desire which avails a little in that direction.

1076. The base are like the tom-tom drum; for they make public the secrets which fall into their ears.

1077. The base shake not the drop of water in their wet hands unless to those who break their jaws with their clinched fists.

1078. The great will benefit those who tell them what they want. The low are like the sugarcane which must be crusehed, before they do good.

1079. The low or abject will be clever enough to trace or detect some spot or blot in the character of others when they see those dressed well or fed sumptuously.

1080. What are the base or abject fit for? In times of ill-hap, they will offer themselves for sale in haste and then and there.

---

1071. The author's self-experience. Almost every couplet in this chapter is a familiar quotation.

# 108. கயமை

(குறள் 1, 3, 2, 5, 4, 6, 8, 9, 7, 10)

1071. மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில்.

1072. நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

1073. தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான்.

1074. அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.

1075. அச்சமே கீழ்கள தாசார மெச்ச
மவாவுண் டேலுண் டாஞ் சிறிது.

1076. அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

1077. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு.

1078. சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்.

1079. உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ்.

1080. எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

## CIX. PERTURBATION AT THE SIGHT OF BEAUTY

(M.A. 9, 1, 2, 3, 6, 4, 8, 5, 7, 10)

1081. Is she a goddess or a peacock rare or a maiden with golden ear jewels? My mind is perturbed or at sixes or sevens.

1082. She responded to my glances with hers, she, Lakshmi-like, darting her eyes, as if at the head of a legion.

1083. Formerly I knew not Yama. Now I knew him embroiled in the great war waged by the charming maiden.

1084. Her appearance is life-devouring, and her eyes compete wth the gracious form of the inncoent maiden.

1085. Is it death, or eye, or fawn? the simple maiden's glance partakes of the nature of the three.

1086. If here bent eye-brows will branch like shut out her glances, her eyes, I am sure, will wage no terrible war.

1087. The maiden's cloth on the maiden's budding (unfading) breast is like the veil on the face of the fiery elephant.

1088. Has the maiden's bright forehead broken my might which made my vanquished enemies be ashamed in war?

1089. What other ornament does a coy maiden need who by nature has been endowed with a fawn like glance and modesty?

1090. The frothy or fuming toddy will make the drinkers merry, only when they take it, and it does not, like the love-passion, cheer them when they see it.

---

Love Furtive and Wedded. Chaps. 109 to 115 and 116 to 133 deal respectively with the two kinds of love.

1082. Beauty assaulting even the seers.

1083, 1084. worthy, charming maiden.

## 109. தகையணங்குறுத்தல்

(குறள் 9, 1, 2, 3, 6, 4, 8, 5, 7, 10)

1081. அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொன் மாலுமென் னெஞ்சு.

1082. நோக்கினா நோக்கெதிர் நோக்குத றாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து.

1083. பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு.

1084. கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண்.

1085. கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர
னோக்கமிம் மூன்று முடைத்து.

1086. கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண்.

1087. கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்
படாஅ முலைமேற் றுகில்.

1088. ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு
ணண்ணாரு முட்குமென் பீடு.

1089. பிணையேர் மடநோக்கு நாணுமுடையாட்
கணியெவனோ வேதில தந்து.

1090. உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று.

## CX. TO KNOW THE WISH BY SIGNS

(M.A. 1, 4, 2, 3, 6, 8, 9, 7, 5, 10)

1091. This maiden's black painted eye makes a two-fold glance : one causing pain and the other being an unguent or healing balm.

1092. The furtive side-glance (ogling) for an instant is not an equal-half, but more than half in the matter of love.

1093. She looked, and looking, she bowed. This is like water poured to rear her tender love for the mature act of fond embrace.

1094. When I look on her, she looks on me and smiles gently.

1095. When she does not cast her glance at me direct, she casts a side-glance at me and laughs gently as if in derision.

1096. Though she speaks as if she had no words of love, it is quickly felt by the despised that her words are not words of scorn.

1097. Feigned words of dislike and feigned frowning look are signs of true love in disguise.

1098. There is a beauty in her gentle nature. When I look on her, the loving maiden has a soft corner in her heart for me.

1099. To cast a general look like a stranger is found in the way of true lovers.

1100. When eye answers to eye, oral words are of no use or avail nothing.

---

Lovers look in different ways. They cast side-long looks, smiling looks, general, indifferent looks, frowning looks, direct looks thereby revealing thier deep love, and they need no words to convey it.

# 110. குறிப்பறிதல்

(குறள் 1, 4, 2, 3, 6, 8, 9, 7, 5, 10)

1091. இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.

1092. கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது.

1093. நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர்.

1094. யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும்.

1095. குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும்.

1096. உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ
லொல்லை யுணரப் படும்.

1097. செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு
முறாஅர்போன் றுற்றார் குறிப்பு.

1098. அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப்
பசையினள் பைய நகும்.

1099. ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள.

1100. கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
ளென்ன பயனு மில.

## CXI. TO REJOICE IN UNION

(M.A. 2, 1, 4, 7, 5, 8, 3, 9, 10, 6)

1101. Sight, hearing, taste, smell, touch - experienced by the five-senses are found in the damsel wearing shining armlets.

1102. Disease is healed by contraries, The decked damsel herself is cure for the disease caused by her.

1103. To sleep clasping the soft shoulders of those whom they love is sweeter to him than heaven itself, the abode of him of the lotus-eye.

1104. Whence did she get this strange fire? When I withdraw from her, it burns; when I go near, it is cold (cooling).

1105. The shoulder-clasping of her who wears garlands on her tresses affords exactly whatever is desired, then and there.

1106. The innocent damsel's shoulders are sweeter than ambrosia, as, when I touch them, they revive my drooping spirits.

1107. Union with that beautiful damsel affords such pleasure as is enjoyed at home by one who lives on his share out of what he has in store, after sharing it with others.

1108. Sweet to the fond lovers is that close union unsevered even by the thin air.

1109. To be sulky, to get off sulkiness, and to unite these are the fruits of the union of lovers.

1110. Every time a man learns, he knows his lack of learning. So do I find every time I approach my beloved, richly adorned damsel. I find new, new pleasures.

---

1101. Oft-quoted.

1110. A general truth found by experience.

# 111. புணர்ச்சி மகிழ்தல்

(குறள் 2, 1, 4, 7, 5, 8, 3, 9, 10, 6)

1101. கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள.

1102. பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

1103. தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
றாமரைக் கண்ணா னுலகு.

1104. நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள்.

1105. வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள்.

1106. உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ் தியன்றன தோள்.

1107. தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு.

1108. வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு.

1109. ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன்.

1110. அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு.

## CXII. EUL )GISE HER BEAUTY

(M.A. 7, 5, 9, 6, 8, 1, 2, 3, 4, 10)

1111. May you fare well, O sensitive flower! My beloved is more tender - natured than yourself.

1112.* O my soul, when you saw the flowers, you were at once dismayed that her eyes resembled the flowers seen by many.

1113. Her frame was soft as tender leaf, her teeth were pearls, her odour like toody's sweet smell, her parted eyes were darts, her shoulders bamboo like.

1114. The Water-lily,when it sees her, will bend for head down and see the ground, for the lilies cannot view with the eyes of her, wearing rich gems.

1115. The flowers of the sensitive plant were worn on her tresses without the stems nipped off. They hard pressed her tender waist. No good drum will be sounded, (if it breaks and she dies).

1116. The stars are perplexed and shoot out of their spheres, for they cannot distinguish between the moon and the maiden's face.

1117. Like the moon which waxes and wanes, are there spots on the maiden's face?

1118. O moon! if your orbs could shine as bright as her face, you could as well fare as my love.

1119. If you, O moon, would compare with the face of her whose eyes were as flowers, do not shine for all who would see.

1120. the flower of the sensitive plant and the swan's downy feathers will be like prickly plant's fruits to the maiden's feet.

---

The 'anicha' flower is used in 1111-1115 and 1120 for comparison. Vide chapter IX. 10.

## 112. நலம் புனைந்துரைத்தல்

(குறள் 7, 5, 9, 6, 8, 1, 2, 3, 4, 10)

1111. நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள்.

1112. மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று.

1113. முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

1114. காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று.

1115. அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ளுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.

1116. மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.

1117. அறுவாய் நிறைந்த வதிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.

1118. மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி.

1119. மலரன்ன கண்ணாண் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றன் மதி.

1120. அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம்.

## CXIII. TO TELL LOVE'S EXCELLENCE

(M.A. 4, 1, 2, 3, 5, 7, 10, 8, 9, 6)

1121. To spittle springing from between her white teeth is as milk and honey mixed together.

1122. LIke the kinship between body and soul is the love between this maid and myself.

1123. O pupil of my eye, begone, for there is no place for the maiden I love.

1124. Life to me is here company, and death, when she, the choicely decked, withdraws from me.

1125. If I forget, I can surely recall, I can never forget the excellence of her love-darting eyes.

1126. My lover is so delicate that his form never gets out of my eyes and that my winking gives him pain.

1127. My lover being within my eyes, I do not pain them, lest I hide him.

1128. My lover resides in my bosom. I don't take hot food lest he feel that heat.

1129. I do not shut my eyes. If I do, I will hide his form. The villagers not knowing it would say, 'he is a stranger to my love'.

1130. Happily does he always reside in my bosom. Mrs. Grundy (The jealous villagers) will say 'he has cut himself off and has no love for me'.

---

1121-1125. are the words of the male lover.
1126-1130. are those of the maiden in love.

## 113. காதற் சிறப்புரைத்தல்

(குறள் 4, 1, 2, 3, 5, 7, 10, 8, 9, 6)

1121. பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.

1122. உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு.

1123. கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம்.

1124. வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து.

1125. உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கண்ணாள் குணம்.

1126. கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர்.

1127. கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து.

1128. நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து.

1129. இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
யேதில ரென்னுமிவ் வூர்.

1130. உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரென்னுமிவ் வூர்.

## CXIV. ABOUT THE GIVING UP OF RESERVE

(M.A. 1, 2, 3, 9, 6, 5, 7, 8, 4, 10)

1131. To those who have enjoyed love and suffered (for want of it), the only safe refuge is the palm-horse and none other is there for me.

1132. My body and soul can no longer endure the suffering. I will give up my reserve and ride the palm-horse.

1133. Once had I modesty and becoming manliness. Today I have but the lovers' palm-horse.

1134. Lover's torrent will sweep away the float of both modest reserve and becoming manliness.

1135. The maiden wearing curved armlets like garlands gave me the palm-horse and the pangs of evening.

1136. I will think of mounting the palm-horse even at midnight. My eyes don't surely go to sleep, ever thinking of that innocent maiden.

1137. Though she suffers from oceanic love, she does not ride the palm-horse. Nothing is of greater merit to her.

1138. He is of superior virtue and sure grace. Love does not reckon them. It comes out, rending secret.

1139. My perturbed love, saying that none knows her heart, has made bold to leave her privacy and rove swirling in the thoroughfares.

1140. When the foolish see me, they redicule me before my eyes, for they have not had my bitter painful experience.

---

1131 - 1137, 1138 - 1140 are the utterances of He-and She-lovers respectively.

## 114. நாணுத்துறவுரைத்தல்

(குறள் 1, 2, 3, 9, 6, 5, 7, 8, 4, 10)

*1131.* காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி.

*1132.* நோனா வுடம்பு முயிரு மடலேறு
நாணினை நீக்கி நிறுத்து

*1133.* நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல்.

*1134.* காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை.

*1135.* தொடலைக் குறுந்தொடி தந்தாண் மடலொடு
மாலை யுழக்குந் துயர்.

*1136.* மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண்.

*1137.* கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.

*1138.* நிறையரியர் மன்னளிய ரென்னாது காம
மறையிறந்து மன்று படும்.

*1139.* அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம
மறுகின் மறுகு மருண்டு.

*1140.* யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு.

## CXV. TO ANNOUNCE THE RUMOUR

(M.A. 10, 5, 7, 8, 6, 1, 2, 9, 3, 4)

1141. Dear life lasts on account of this rumous, and many do not know this, by good luck.

1142. Without knowing the perciousness of the flower like maiden, the village has given out this rumour to us.

1143. Is not the Village's ill-report a good to me? It is as I got a thing not won yet.

1144. My love grows with the ill-rumour. But for it my love would lose its power to grow, and fade.

1145. The more one drinks toddy, the more he desires it. So the more the rumour spreads the sweeter it is to me.

1146. Surely I knew my lover but once, but the rumour has spread apace and abroad as the dragon eclipses the moon as a whole.

1147. My love-anguish grows rapidly, manured by villagers' ill-rumours and irrigated by my mother's word.

1148. To say that we will extinguish love by the spreading scandal is just like saying that we will put out fire with ghee.

1149. When my lover who at first said, `I will not forsake you, don't be afraid', has publicly relinquished me, can I feel ashamed of the public scandal?

1150. My lover will yield if he pleases, and this village has raised the scandal we desire.

---

1141 - 1145 & 1146 - 1150. are the respective utterances of he and she-lovers. This chapter closes the section on Furtive or clandestine love.

## 115. அலரறிவுறுத்தல்

(குறள் 10, 5, 7, 8, 6, 1, 2, 9, 3, 4)

*1141.* அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால்.

*1142.* மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர்.

*1143.* உறாஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து.

*1144.* கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற்
றவ்வென்னுந் தன்மை யிழந்து.

*1145.* களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது.

*1146.* கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று.

*1147.* ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொன்
னீராக நீளுமிந் நோய்

*1148.* நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்
காம நுதுப்பே மெனல்.

*1149.* அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை.

*1150.* தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்கு மிவ்வூர்.

## CXVI. SEPARATION HARD TO BEAR

(M.A. 6, 1, 10, 4, 5, 8, 2, 3, 9, 7)

1151. Tell me if you don't depart. Tell those who will survive this affliction that you wil make a quick return.

1152. His sight was once joyous, and the fear of his separation makes every union with him sad and sorrowful.

1153. As it is likely that the lover will depart for once, it is hard to pin faith in the lover's promise of non-separation.

1154. If he who once graciously said `fear not' departs, she who trusted his word of assurance cannot be blamed.

1155. If you will save my life, see that my lover does not part. But if he departs, it is rare for us to meet again.

1156. He who is hard-hearted to tell me of his separation, can hardly be expected to be gracious towards me.

1157. The bangles slipping from their places about the wrist proclaimed beforehand the departure of the lord of the shore.

1158. It is painful to stay in a place where there are no relations. More painful than it is to bid farewell to be beloved.

1159. Fire will burn when touched. But the fire of sexual passion burns when contact ceases.

1160. What a contrast! many may survive meekly bearing the pain, alleviating sore distress, and enduring the pang of separation.

---

The wrench of separation of lovers is beautifully portrayed here.

1157. 'Turaivan' - a chief of a maritime district., The word is used to signify 'neithal', where a female bemoans the absence of her lover. This chapter begins 'karpu Iyal' or Wedded Love.

# 116. பிரிவாற்றாமை

(குறள் 6, 1, 10, 4, 5, 8, 2, 3, 9, 7)

1151. செல்லாமை யுண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

1152. இன்கண் ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்கண் ணுடைத்தாற் புணர்வு.

1153. அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.

1154. அளித்தஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு.

1155. ஓம்பி னமைந்தார் பிரிவோம்பல் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு.

1156. பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
நல்குவ ரென்னு நசை.

1157. துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை
யிறையிறவா நின்ற வளை.

1158. இன்னா தினனில்லூர் வாழ்தல் அதனினு
மின்னா தினியார்ப் பிரிவு.

1159. தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுடல் ஆற்றுமோ தீ.

1160. அரிதாற்றி யல்லல்நோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்.

## CXVII. WEEPING, LOVE-SICK AND EMACIATED

(M.A. 2, 3, 10, 4, 1, 5, 6, 7, 8, 9,)

1161. I would surely hide my love-sickness, but it swells like the spring water which increases everytime that water is baled out.

1162. I cannot conceal this sickess, and I feel ashamed to divulge it to my lover.

1163. Love and modesty hang upon my live, poised like the porter's pole, within my fatigued frame.

1164. Sure there is the ocean of love, but there is no safe raft to help to cross it.

1165. What will not hose who cause pain in the hour of friendly trust do in the season of angry mistrust (hate)?

1166. Oceanic is the pleasure of happy love, but much greater than that is the wrench of unrequited love.

1167. I do not see the shore, swimming the mighty torent of love. Alone am I at midnight (in the calmest and stillest night).

1168. Night, comforting night, which steeps all living things in honey-dew slumber, keeps me alone for her companion.

1169. More cruel than the cruel one is the drawling night in these hard times when I keep vigil.

1170. When my eyes would travel towards him as fast as my soul, they find it hard to swim the tears flooding in them.

---

Note the metaphor of the sea of love in 1164 and 1166 and the love - torrent.

# 117. படர்மெலிந்திரங்கல்

(குறள் 2, 3, 10, 4, 1, 5, 6, 7, 8, 9)

1161. மறைப்பேன்மன் யானிஃதோ நோயை யிறைப்பவர்க்
கூற்றுநீர் போல மிகும்.

1162. கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும்.

1163. காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
னோனா வுடம்பி னகத்து.

1164. காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்து
மேமப் புணைமன்னு மில்.

1165. துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர்.

1166. இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது.

1167. காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன்.

1168. மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
வென்னல்ல தில்லை துணை.

1169. கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நா
ணெடிய கழியு மிரா.

1170. உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோவென் கண்.

## CXVIII. EYES LONGING AND WEEPING IN LOVE-SORROW

(M.A. 2, 3, 4, 8, 10, 6, 7, 1, 9, 5)

1171. Why should the eyes weep in grief when I saw the incurable diseae pointed out to me by them alone.

1172. Why do my painted eyes which looked unwittingly that day, now waste themselves away with consuming grief?

1173. The eyes that darted love-glances then are now weeping themselves. This surely deserves a smile.

1174. The painted eyes that brought on me the agonishing incurable diseae have wept bitterly till the source of tears became dry.

1175. My eyes that wrought me vast and inexhaustible sea-like woes are now lost in agonies banishing repose.

1176. O! What a delightful thing it is that the eyes that wrought me pangs are now lost in them.

1177. Let then eyes that cast their food glances at him with an eager and melting heart, now shed tears in aching pain till they become dry.

1178. The lover who loved me once, stays here. My eyes will have no rest without seeing him.

1179. When my lover is away, my eyes sleep not. When he is here, then too they do not sleep. In both ways, my eyes are troubled most.

1180. It is not hard but easy for men of the place to know the secret when my weeping eyes, like drum-beats, proclaim it to all.

---

Tears are tears of joy and tears of sorrow. The latter is referred to by the moaning lover at home. The eye suffers rather than the lover, by keeping vigil.

## 118. கண்விதுப்பழிதல்

(குறள் 2, 3, 4, 8, 10, 6, 7, 1, 9, 5)

1171. கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது.

1172. தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்
பைதல் லுழப்ப தெவன்.

1173. கதுமெனத் தாம்நோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து

1174. பெயலாற்றா நீருலந்த வுண்க ணுயலாற்றா
வுய்வினோ யென்க ணிறுத்து.

1175. படலாற்றா பைதல் லுழக்குங் கடலாற்றாக்
காமநோய் செய்தவென் கண்.

1176. ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
டாஅ மிதற்பட் டது.

1177. உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண்.

1178. பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண்.

1179. வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண்.

1180. மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போ
லறைபறை கண்ணா ரகத்து.

## CXIX. SALLOW AFFLICTION

(M.A. 8, 6, 9, 5, 4, 2, 3, 7, 10, 1)

1181. I who agreed to my lover's separation became sallow. To whom shall I complain of change of colour?

1182. This sallow hue proclaims that he gave it to me. It spreads on my body - the affliction.

1183. He took from me my beauty and modesty in return for his gift of love-sickness and sallowness to me.

1184. I think over what he said and speak of his worth. This sallow colour is false.

1185. Then did my lover go away hence. Here this pallid hue has usurped his place.

1186. As darkness waits for the lamp's extinguishment, this sallow affliction awaits the end of my lover's last union with me.

1187. I lay clasping him and turned aside. Forthwith my love-sickness came on me in a flood.

1188. They say that she changed in colour, but none say that he first deserted her.

1189. If he who made me agree to the separation fares well, it matters not if my complexion has turned sallow and afflicted me.

1190. It is good that my complexion be called sallow if my lover who had my consent for his separation be not ill-spoken of as a deserter.

---

These are the words of the woman from whom her lover has parted with her consent but whose colour has changed owing to her pining alone at home and who wishes that the world does not say an unkind word about her lover as if he had quit her.

# 119. பசப்புறுபருவரல்

(குறள் 8, 6, 9, 5, 4, 2, 3, 7, 10, 1)

1181. நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற.

1182. அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு.

1183. சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையுந் தந்து.

1184. உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு.

1185. உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்
மேனி பசப்பூர் வது.

1186. விளக்கற்றம் பார்க்கு மிருளேபோல் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.

1187. புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
லள்ளிக்கொள் வற்றே பசப்பு.

1188. பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில்.

1189. பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்.
நன்னிலைய ராவ ரெனின்.

1190. பசப்பெனப் பேர்பெறுத லன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றா ரெனின்.

## CXX. LONELY DISTRESS

(M.A. 2, 6, 7, 8, 4, 5, 1, 9, 10, 3)

1191. He whom she loves obtains the love of her whom he loves, here love being enjoyed like the sweet stoneless fruit for him.

1192. As showers come down from heaven on living men, so is the tender grace bestowed by lovers on those whom they love.

1193. Those who love and are loved may boast 'we have made life's very best'.

1194. Those who are loved will prove unlucky unless they are loved by those whom they love i.e. unless their love is requited.

1195. What can our lover do us if he does not requite our love (love us as we do)?

1196. One sided love is bad: love on both sides is good, like the well-poised pole on the porter's shoulders.

1197. While Cupid overwhelms the lonely me, it seems that he does not see my pain and grief.

1198. None are worse than they who do not gain words of love from those whom they love and who live out their life in the world.

1199. Though he who desires me shows no grace to me, his words are words of sweet melody to me (to my ear).

1200. Tell him your affliction who is not afflicted as you are. My soul, goodbye and try to fill up the sea of woe.

---

The agony of suspense is portrayed here.

1200. Forget the distressing lover. The reference to the wide sea being filled up and converted into land is suggestive, as it separates the lovers or keeps them apart, and if it became land, she would traverse the distance and be united to him.

# 120. தனிப்படர்மிகுதி

(குறள் 2, 6, 7, 8, 4, 5, 1, 9, 10, 3)

1191. தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி.

1192. வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி.

1193. வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு.

1194. வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின்.

1195. நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை.

1196. ஒருதலையா னின்னாது காமங்காப் போல
விருதலை யானு மினிது.

1197. பருவரலும் பைதலுங் காணான்கொல் காம
னொருவர்க ணின்றொழுகு வான்.

1198. வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

1199. நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு.

1200. உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு.

